உ

கணபதி துணை.

# திருப்பெருந்துறைப்புராணம்.

திருக்கைலாயபரம்பரைத்
திருவாவடுதுறையாதீனத்து
மஹாவித்துவானாகிய
திரிசிரபுரம்
ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்
இயற்றியது.

இது
மேற்படி ஆதீனத்து
ஸ்ரீலஸ்ரீ
அம்பலவாணதேசிகரவர்கள்
ஆஜ்ஞையின்படி
திருவிடைமருதூர்க்கட்டளை
ஸ்ரீ காசிநாததம்பிரானவர்கள்செய்த
பொருளுதவியைக்கொண்டு
இந்நூலாசிரியர் மாணாக்கரும்
கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய
உத்தமதானபுரம்
வே. சாமிநாதையரால்
பரிசோதித்து,

சென்னை:
வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

1892.

# சூசீபத்திரம்.

கணபதி துணை.

# திருப்பெருந்துறைப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர் காப்பு.

மாமேவு புயனிறத்து மோட்டாமை முதுகொருகை வாங்கித் தற்குப்
பாமேவு வயிறிரண்டென் றருச்சிப்பார் கொள்ளாத படியென் பாதி
தாமேவு தந்தையகன் மார்பணிந்து புகழொன்றே தான்கைக் கொண்டு
நாமேவு கருணையின்வாழ் களிற்றுமுகப் பெருமானை நயந்து வாழ்வாம். (க)

### வெயிலுவந்தவிநாயகக்கடவுள்.

இலவுவந்த செவ்வாயெம் பெருமாட்டி பார்வையொடு மிருக்கு முன்னால்
சொலவுவந்த நம்பெருமான் பார்வையுமேற் றமர்சிறப்புத் தோற்றி யாங்குப்
பலவுவந்த பொழில்வளஞ்சால் குருந்துறையும் பெருந்துறையிற் பண்பு கூரு
நிலவுவந்த முடியினெடும் வெயிலுவந்த மெய்க்களிற்றை நினைந்து வாழ்வாம். (உ)

### சொக்கவிநாயகக்கடவுள்.

தக்கவினை யகன்மறையுட் பொருடேர்ந்தய்ந் திடுதிபுன ருங்கு மாமே
கக்கவினை யகன்மகச்சா லையினெனுந்த தீசிமுதற் கணிப்பி லோர்கள்
புக்கவினை யகனமர்ந்து முதலானை யென்றெடுத்துப் போற்ற மேய
சொக்கவினை யகன்புகலு மிக்கவிநா யகனுயிற் றுன்னா றென்னே. (௩)

### ஆன்மநாதசுவாமி.

ஏர்பூத்த வண்டகம்பாய் முண்டகஞ்சார் நான்முகனுங் கௌத்து வப்போர்த்
தார்பூத்த வோர்பானு மார்பானுங் கைலாய சைலத் தானு
நார்பூத்த துதியெடுப்பக் குருந்துறையும் பெருந்துறையி னயந்து மேவி
யார்பூத்த வருள்கொழிக்கு மான்மநா தக்கடவு ளடிதாழ்ந் துய்வாம். (௪)

### சிவயோகாம்பிகையம்மை.

தூயநா மத்தருவ முருவமெவை யெனினுமொரு தோன்றல் போன்றே
பாயநா னிலவரைப்பின் கணுமமர்வா ளெனறெரித்த படியே போல
வாயநா தங்கடந்த வான்மநா தக்கடவு ளமர்தற் கேற்ப
மேயநா யகிசிவயோ காம்பிகைதன் விரைமலர்த்தாண் மேவி வாழ்வாம். (௫)

### சபாநாயகர்.

அரைப்புலித்தோன் மயிருகுப்பக் காற்புலித்தோன் மயிர்முகிழ்ப்ப வணிபல் பாம்பும்
வரைப்பகன்று குலையவொரு பாம்புநிலை நின்றுநனி மகிழ மேக்குத்
திரைப்பயமா தலைஇக்கவலக் கிழக்கிளங்கன் னிகையின்பந் திளைப்ப நீர்சூழ்
தரைப்பயனு மணிமன்று ணடநவிலு மொருமுதலைச் சரணஞ் சார்வாம். (௬)

### சிவகாமியம்மை.

மாறுகரு தாதுமுகின் மழைபொழிவ தெனினுமுடல் வளமா மின்முன்
னூறுபல வாமிடையீ டௌததுபோ லாதுவள முயிர்கண் மேவி
வீறுமணி மன்றுணட மென்றுமூ றறநோக்கி விளங்கா னந்தப்
பேறுபெறக் காட்டலெனு மருண்மழைபெய் பசுமுகிலைப் பேணி வாழ்வாம். (௭)

### குருந்தழலப்பெருமான்.

கரியவனுங் கலத்தலரும் பாதமவன் மனைவியுடல் கலப்பத் தோன்றிப்
பிரியமிக வெழுந்தருளி வந்துதிரு வாதவூர்ப் பெரியர் போற்றித்
துரியநிலை கடந்துசிவ போகமது வுண்டுகளி துன்ற நீழல்
விரியவுயர் குருந்தடியி லிருந்தருளும் பெருவாழ்வை விளம்பி வாழ்வாம். (௮)

### குதிரைச்சேவகர்.

அரியமறை மேலானென் றுரைப்பதனைக் கற்றவர்நூ லளவை யானே
தெரியவல ரல்லாதார் தெரிவர்கொலோ யாவர்களுந் தெரியு மாறு
பிரியமிகு மொருவருக்காத் தலைச்சாத்து முதலியவை பிறங்க நாளு
முரியவொரு பரியேறி யுலாயசே வகன்மலர்த்தா ளுள்ளத் துள்வாம். (௯)

### வீரபத்திரக்கடவுள்.

மேயசிவ நிந்தைபுரி வெய்யவர்க்குப் புரிகழுவாய் வேறின் றன்னோர்
மாயவொறுத் திடலன்றி யென்னுமறைக் கிலக்கியமா வாள்கைக் கொண்டு
தீயமகம் புரிதக்கன் சிரமறுத்துச் சேர்ந்தாருஞ் சிதையச் செய்த
நாயகமா விறல்வீர பத்திரநம் பணிவணங்கி நயந்து வாழ்வாம். (௧௦)

### சொக்கவிநாயகக்கடவுள்.

அஞ்சொக்க நினைத்திடுவோர் கருவிபிற வேண்டானென் றறைத றேற்ற
நஞ்சொக்க வழன்றெழுமால் களிற்றைமுகத் திருபாலு நகுவெண் டிங்கட்
பிஞ்சொக்க வொளிர்கோட்டு னொன்றுகொடு தருமமெலாம் பிறங்க மாட்டி
மஞ்சொக்க மதம்பொழிந்து வருசொக்க மால்களிற்றை வணங்கி வாழ்வாம். (௧௧)

### குமாரக்கடவுள்.

புரமுதல்வென் றுறுபுகழ்மாத் திரங்கொண்ட தந்தையினும் பொருமோர் யானை
யுரனறவென் றதனொடுமூர் தியுங்கொண்டு மிகுசிறப்பை யுறுமுன் னோனும்
பரவுறச்சூர் தடிந்தவற்றோ டோங்குகே தனமொருகை பற்றப் பெற்ற
விரவுமல மருந்துறையும் பெருந்துறைக்கு மாரனடி மேவி வாழ்வாம். (௧௨)

திருநந்திதேவர். வேறு.

மூத்திரை யடைவோர் ஞான முந்துற வடைதல் போலச்
சத்திரை யொருபால் வைத்த பிரான்றனை யடைவோர் முந்திப்
பத்திரை யியற்றித் தன்னை யடைதரப் பண்பார் யோக
சித்திரை யடைந்த நந்தி தேவனை வணக்கஞ் செய்வாம். (கங)

அகத்தியமுனிவர். வேறு.

நெடுமை குறுமை யுயர்பிழிபை நிரலே யவற்றிற் கெதிர்மறையாப்
படுமென் மையினிற் செயவல்லான் பரவை யுணலான் மிக்குயர்ந்து
விடுதென் றிசையைச் சமஞ்செயலால் வெற்பை யரத்து ளழுத்துதலாற்
கொடுவின் மாலைச் சிவஞ்செயலா லென்னு முனிதாள் குறிக்கொள்வாம். (கச)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர். வேறு.

பாலள வின்று ளுண்டான் றுறுவியர்ப் பார்த்து வந்த
மாலள வின்றுண் கொள்ள வண்பாலோர் சிறுபோழ் துண்டான்
மேலள வுலகின் முனை விமலனைக் கண்டு காட்டி
நூலள வொருநூல் சொற்ற நோன்மையாற் றுழுது வாழ்வாம். (கரு)

திருநாவுக்கரசுநாயனர்.

பாலிடை நஞ்சங் கண்டு பதைபதைத் தோடி யோர்பா
னூலிடை யவருண் பாக்கு நுவன்றமா லயனுண் ணுணப்
பாலிடை நஞ்சங் கண்டு பதைப்பின்றித் தாமுண் டோர்பா
னூலிடை யவரே யென்னப் பொலியுநோன் மையர்தாள் போற்றி. (கசு)

சுந்தரமூர்த்திநாயனர்.

வரைபல பலபெ யர்த்து மருவுபன் னுண்மு யன்று
புரையறச் செறித்தோ ருந்தி கடந்தமால் புந்தி நாணத்
தரைகிழித் தெழுமோ ருந்தி தான்வழி விடமுன் பாடி
விரையவை யாறு மேய விமலர்தாள் சென்னி சேர்ப்பாம். (கள)

மாணிக்கவாசகசுவாமிகள்.

இந்திய மொன்றற் காமண் ணிடந்துபன் னுண்மு யன்று
முந்திய பாதங் காணு முகுந்தனே மாற வைந்து
நந்திய சிரத்தப் பாத நகுகுருந் தடிமே வப்பெற்
றுந்திய விறுமாப் புற்ற வொருவருக் கன்பு செய்வாம். (கஅ)

சண்டேசுரநாயனர். வேறு.

ஆத்திமுத விடையில்லா வாத்திதனைத் தாபித்தே
யாத்திகழும் பாலாட்டி வழிபடுகோ லடுபவம்போல்
லாத்தியக்க மென்றறுப்பா னடியறுத்து விடைமேலா
லாத்தியொடு மாத்தனைக்கண் டமர்ந்தபிரான் பதம்பணிவாம். (கக)

அறுபத்துமூவர். வேறு.

புரிவினை புரிவோ னெய்தும் பயனது பொருந்த நல்கும்
பெரியவன் சைவ மன்றிப் பேசாமற் றுள்ள வென்று
தெரிதரு மனத்த ராகிச் செயற்கருஞ் செயன்மேற் கொண்ட
பரிவுறு பத்து மூவர் பாததா மரைகள் போற்றி. (உ0)

சேக்கிழார்நாயனுர்.

*பரவுறு மடியார் மேன்மை பாடவல் லவரென் றெங்கள்*
*குரவரு ளொருவ ரன்பிற் குறிக்கொடு துதித்தல் கண்டுந்*
*தரமிகு சிறப்பு வாய்ந்த தன்மையார் சேக்கி ழாரைக்*
*கரவறத் துதியே மென்னிற் கடும்பிழை யாகு மன்றே.* (உக)

மூந்நூற்றுவர்.

*பிறைமுடிக் கணிந்த வெங்கள் பெருந்தகைப் பதியைத் தம்மோ*
*டறைதர வயன்மா லாதி யாவரு மஞ்ச நேர்ந்து*
*நிறையெம்மோ டொருவ னென்று நிகழ்த்துறத் துணிமூந் நூற்று*
*மறையவர் செம்பொற் பாத மரைமலர்க் கன்பு செய்வாம்.* (உஉ)

மற்றையடியார்கள்.

*பெருந்துறை யான்ம நாதப் பெருந்தகை யால யத்துத்*
*திருந்துபல் பணிசெய் வோருந் தெளிபொருள் சிவமே யென்று*
*பொருந்திய மனத்த ரியாரும் புன்மையேன் மனத்து நீங்கா*
*திருந்துவெவ் விடைய நாடி யெழாவகை யிருத்து வாரால்.* (உங)

பஞ்சாக்கரதேசிகர். வேறு.

*அறைகடல்சூ ழுலகீரியா வருமுண்மை சொலக்கேண்மி னறமு யன்று*
*மறைமுதலா கியகலையோ திடல்வேண்டா வவையனைத்தும் வயங்கி நாளு*
*முறைதிருவா வடுதுறையெங் குருநமச்சி வாயன்பே ரொன்றே யோத*
*விறையிலிக பரமுத்தி யுண்டாகு மவைகொடுப்ப திவைமே லென்னே.* (உச)

பின்வேலப்பதேசிகர்.

*நந்தியெனு நம்முதலா ரியனைமுனம் வழிபட்டு நயந்து பின்ன*
*ரந்திமதி புனைசடிலத் திறையைவழி படுதன்முறை யதுமா ருது*
*வந்திவணியா முறைவாமென் றுறைதல்போற் பெருந்துறையை மருவி மாசு*
*சிந்தியமர் துறைசைப்பின் வேலப்ப தேசிகன்ருள் சென்னி சேர்ப்பாம்.* (உரு)

அம்பலவாணதேசிகர்.

*புண்ணியவா வடுதுறையிற் பொல்லாத பாவியேன் பொருட்டி யாரு*
*மெண்ணியவம் பலவாண னெனுந்திருப்பேர் பூண்டதனுக் கியையத் தோன்றித்*
*திண்ணியமா மலமூலத் தொடுசிதைய வடிமுடியிற் செறித்தாட் கொண்டு*
*கண்ணியபே ரின்பளித்தா னவற்கினியாற் றுதற்காய கைம்மா றென்னே.* (உசு)

சுப்பிரமணியதேசிகர்.

*இருந்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய தேசிகற்ருழ்ந் தினிய கூறிப்*
*பொருந்திதயத் திருத்தினே னுணவுதவு வேனென்று புகன்றந் நாளே*
*வருந்திமுய லவுமெனது போதவினை வொழிந்ததந்தோ மற்றென் செய்கே*
*னருந்திறலா ரியன்பசிக்க வுண்பானென் பெருபழியு மடைந்து ளேனே,* (உஎ)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

# அவையடக்கம்.

துன்னுவளம் பொலிகாசி மான்மியத்தை மொழிபெயர்த்துத் தோன்ற நீயே
பன்னுகென யான்பாடக் கேட்டுவந்தோன் றறவொழுக்கப் பண்பான் மிக்கோன்
மின்னுபெருந் துறைக்குரவன் கட்டளைமேற் கொடுநிகழும் விரதம் பூண்டோன்
முன்னுபுகழ் மிகுதிருவா வடுதுறைச்சுப் பிரமணிய முனிவர் கோமான். (க)

வேறு.

வலமலி யான்ம நாதர் மான்மிய மொழிபெ யர்த்து
நலமலி தமிழாற் பாடி நன்றுநீ தருதி யென்னப்
புலமலி வில்லே னேனும் புகன்றசொன் மறுக்க மாட்டே
னிலமலி புலவர் முன்பு நிகழ்த்திடு துணிபுற் றேனால். (உ)

கிறியுறு மதுர வாக்குக் கேட்டுவப் பவனென் முகாச்
சிறியநின் வாக்குங் கேட்டல் செய்யுங்கொ லென்னின் மேனி
முறிநிக ருமைய ணைக்க வுவக்குமெய் யொருவர் முந்தி
யெறிகலு மேற்ற தோர்ந்தே யிசைப்பதற் கிசைந்தேன் மன்னே. (ங)

மலைவிலா வருளோ வன்றேல் வழுவிலா வியலோ நஞ்சொ
னிலையதென் றிறைசேர் பாடே னெடிதுநாள் கழித்தே னெள்ளி
னுலைவினை யில்லை யாக வேறொன்று முதவா தாகத்
தலைவிளக் கெரித்துய்ந் தார்தஞ் சரித்திரங் கேட்டி ருந்தும். (ச)

மணிமணி யாகத் தோன்றும் வார்த்தைகொள் செவிவெம் பாசப்
பிணியினேன் வறிய சொல்லும் பேணாது விடுமேல் வான
மணிமதி யன்றி யுற்கை யனைத்தையும் விலக்கும் வாவி
நணியதா மரைய லான்மற் றனைத்தையு நலியப் போக்கும். (ரு)

மூவரு மிறைஞ்ச நின்ற முதலவ னான்ம நாதன்
யாவரு மிறைஞ்ச நன்கேற் றினிதருள் சுரக்கு மென்னின்
மூவருந் துதிப்பக் கொண்ட முடிவிலின் பனைய பெம்மா
னியாவருந் துதிப்பக் கொள்வா னென்பதற் கிழுக்கொன் றுண்டோ. (சா)

மறையினும் விரிந்தாற் போல்வ தொகையென வகுத்தா ரந்த
முறைதவ றியதொ கைக்கு மொழிந்திலர் வேறு நாம
நிறைபெரும் புராணங் கூறு நெறியிஃ தென்று ருள்ளா
லுறைதவ றுறினும் வேறு பெயருரைத் திடவல் லாரோ. (எ)

முடியமெய்ஞ் ஞானந் தேர்ந்தார் முன்னவ னான்ம நாத
நெடியவன் புராணந் தன்னு ணிகழ்ந்தது குற்ற மேனு
மடியவ னவனு ணர்த்த வுணருஞ்சித் தாத லாலே
கொடியதென் றென்மேற் குற்றங் கூறவுந் துணிவார் கொல்லோ. (அ)

வென்றசீ ரான்ம நாத ரெனும்பெயர் விழைந்தார் ஞான
நன்றிலா வெனைவி லக்கார் நாவலூ ரருக்கு வெண்ணெ
யன்றருள் செய்தா ரென்று மருச்சனை பாட்டே யென்று
ரொன்றநின் பாட்டே யென்னு ருறுதியென் னிதன்மேல் வேண்டும். (கூ)

அவையடக்கம் முற்றிற்று.

# சிறப்புப்பாயிரம்.

தென்பூத்த பழனமெலாங் கன்னலுஞ்செங் நெலுமுயர்ந்து சேண ளாவும்
பொன்பூத்த பெருவளஞ்சால் பெருந்துறைமான் மியந்தமிழாற் புனைதல் செய்தான்
கொன்பூத்த ஞானகலை முதற்பலவு மரிறபத்தேர் குணத்தான் மிக்கான்
மன்பூத்த சிராமலைவாழ் மீனாட்சி சுந்தரநா வலவ ரேறே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

# திருநாட்டுப்படலம்.

இருவினை சிமிழ்க்க யாத்த லெய்திமேக் குங்கி ழக்கு
மருவவே றியுமி ழிந்தும் வருந்துபல் பவத்தி னுள்ளு
மொருபவ மேனு மெய்தா தானந்த முற்று வாழ்வான்
றிருவளர் வாதவூரர் சேவடி சேர்ந்து ளோமே. (௧)

மின்னிய வருள்சூற் கொண்டு மிளிர்சிவ யோக மாதோ
டன்னிய மில்லா வான்ம நாதர்தா மமரு மேன்மை
துன்னிய தலமுற் பல்ல தன்னகந் துவன்றக் கொண்டு
மன்னிய பாண்டி நாட்டின் வளஞ்சில கூற லுற்றாம். (௨)

பெரும்படி யகத்தி னுள்ளார் பெருந்தவ நனிசெய் தேய
விரும்படி யடைதற் காய மெய்ச்சிவ லோக மன்பா
மரும்படி யொருவர்க் காக வழைக்குமுன் னெளிதாத் தன்பால்
வரும்படி தவஞ்செய் தன்றான் மாப்புகழ்ப் பாண்டி நாடு. (௩)

புண்ணியக் குமரி யென்றா பொருநையென் றாவா னேரு
நண்ணிய வையை யென்றா நயக்கும்வெண் குடிஞை யென்றா
வண்ணிய வீரி ரண்டு மறமுத னான்கு மாகப்
பண்ணிய தவத்த தன்றோ பண்புசால் பாண்டி நாடு. (௪)

வலனுடை வருண னேவ வருகடல் வறப்ப வென்ற
வலமர முகிலை வென்ற வடிமுடி யுடைய தாய
குலநக ரொன்று போலக் கோணமா மதில்சூழ் வன்மைப்
பலநக ருடைய தம்மா பலர்புகழ் பாண்டி நாடு. (௫)

கம்பந்தங் காது நீத்த கரியமான் முதலோ ரேத்த
வம்பந்த மாக்குங் கொங்கை யானையை வயங்கோர் குன்றி
னம்பந்த மறுப்பான் வேட்ப நயந்தரு தெய்வ நாட்டுச்
சம்பந்தம் பெற்ற தன்றோ தரைபுகழ் பாண்டி நாடு. (௬)

எந்தநன் னாடுந் தன்னை நோக்குவா னியங்கு மேக
மந்தநன் னாட்டு மாறி னடிப்பிணிப் புறுமென் றஞ்சி
முந்தநன் கமைய நோக்கிப் பொழிதர முற்று மேன்மைச்
சந்தமா தவஞ்செய் தன்று தவாப்புகழ்ப் பாண்டி நாடு. (௭)

மருவுட லின்ப மேவ மணங்கெழு நறிய சாந்து
மொருவரும் வாசக் காலு முதவுவ தன்றி யான்மாப்
பெருகுறு மின்ப மேவப் பிறங்குதீந் தமிழு நல்கும்
பருவரை யுடைய தம்மா பலர்புகழ் பாண்டி நாடு. (௮)

புண்ணிய வெண்ணீ றுய பொருவரு கவசம் பூண்டு
கண்ணிய பத்தி வைராக் கியமெனும் படைகை யேந்தி
யெண்ணிய சரியை யாதிச் சேனைநான் கெழப்ப ரப்பித்
திண்ணிய சனனத் தெவ்வைச் செறுவது பாண்டி நாடு. (கூ)

மறையுணர் புலவர் பொன்செய் வணிகர்மன் னவனே போல
நிறைபெரும் புகழ்வே ளாளர் நெருங்கப்பட் டொருகே டின்றி
முறைவிளை வுடைத்தா யம்பொன் முகக்குமா கரம்பல் கொண்டு
குறையறப் பொலிவ தம்மா கொற்கையார் பாண்டி நாடு. (க0)

மறையொலி யொருபா லாக வயங்குமா கமபு ராணத்
துறையொலி யொருபா லாகத் தோன்றிய பாண்டி நாட்டின்
முறையொலி பொதுவிற் சில்ல மொழிதரப் புக்கென் சொற்று
மறையொலி படுகொண் மூவின் வளஞ்சில வறைய லுற்றும். (கக)

மழைவளம். வேறு.

சுருப்ப லங்கலெம் பிரானமர் சுருதிசூழ் வெள்ளிப்
பொருப்ப மைந்ததோ ருருக்கொடு கொண்டன்மீப் போய்நீங்
குருப்ப வாழிநீர் கவர்ந்தொளி ரிந்திர நீலப்
பருப்ப தத்துருக் கொண்டுமீண் டனபுவி பரவ. (கஉ)

மீண்ட கார்மழை நம்மையூர் திறலுடை வேந்தன்
கூண்ட சேனையோ டமர்த்துழி யவன்குலஞ் சென்னி
யாண்ட மாமுடி சிதர்தரச் சிதர்த்தரும் புகழா
னீண்ட நாட்டின்முற் பொழிவது தகுமென நினைந்து. (கங)

உருப்ப மோவுறப் பொழிதிறங் கற்றநா முள்ளத்
தருப்ப மோப்பிடு தண்டமிழ் சீதளச் சந்தம்
விருப்ப மேவுதண் மாருத மேவியபொதியப்
பருப்ப தத்தடை வேமுறை யாமெனப் படர்ந்து. (கச)

வேலை கேர்நிற வடுகநா யகன்திரு மேனி
மாலை யாந்துழாய் நாறிய வுரிமறைத் தாங்குச்
சோலை சூழ்தர நின்றவான் பொதியத்தின் றேற்ற
மேலை வானரு முணர்தரா விதநனி மறைத்து. (கரு)

கடிய கற்பநாட் டெம்மிறைக் கிளையவன் கலக்கு
தொடிய கைம்மட மகளுடற் குருப்பமே துறுத்த
கொடிய வேனிலாங் கோளராக் குலைகுலைந் தின்றே
முடிய வாற்றுவா மெனல்பொர மின்னுபு முழங்கி. (கசு)

பருவ மாறனுட் கொடுமுது வேனிலாம் பருவம்
வெருவ வொவ்வொரு திவலைகண் முந்துற வீழ்த்தித்
திருவ மேவிய பெருந்துறை யகத்தமர் செம்மல்
பொருவ வொன்றுமி லருண்மழை பொழிந்தெனப் பொழிந்த. (கஎ)

ஆங்கு மேவிய முகில்புன லடிக்கடி பருகிப்
பாங்கு மேவுற நால்வகை நிலமெலாம் பரந்து
தேங்கு மாமழை பொழிந்தன வள்ளியர் திறம்போல்
வீங்கு வேனில்போய் வேறிடம் புக்கொளித் தன்றே. (கஅ)

பெருமை மேயநம் புனலெலாங் குடங்கையிற் பெய்தோ
ரருமை யின்றியுண் டவனம ரிடமிதென் றழன்று
கருமை யாழிமா மலயமேற் கவிழ்திறங் காட்டும்
பொருமை மாமுகின் மீளவு மாவயிற் புகுதல். (கக)

பகையை வெல்வது கருதிவா ரிதிமிசைப் படர்ந்து
தகையு ருதுற நெருக்கவு முடைதராத் தவத்தின்
மிகையு ணர்ந்துவெள் கியதென விளர்த்தன மேக
மகைசெய் வேனில்வெந் தீயொடு கோபத்தீ யவித்தே. (உ௦)

வரைம லிந்தன வருவிகள் கலுழிகள் வனஞ்சார்
தரைம லிந்தன வேரிகா லோடைவான் றடங்க
ணிரைம லிந்தன தண்பணை நெய்தன்மிக் கூறித்
திரைம லிந்தன சிறுமணற் கேணியெத் திசையும். (உக)

கயிர வப்பகை யுருமறைத் தெழுந்தபல் காருஞ்
செயிர றப்பொழி மழைபரந் தெங்கணுஞ் செறியப்
பயிர்ப ரப்புநா னிலமொரீஇ யுட்டினம் பாறிற்
றுயிர்வ ரக்குற ளுச்சிதைந் தோடுவ தொத்தே. (உஉ)

மழைபொ ழிந்தநீ ரெங்கணும் பரந்துசென் மாட்சி
பிழைசெய் வேனில்வெப் பொழிந்ததோ பெருநில மடந்தை
யுழையெங் காயினு முள்ளதோ வென்றுளத் தமைய
விழையுஞ் சோதனை புரிகுவான் மீச்செலல் கடுக்கும். (உ௩)

பொங்கு மாமுகி லிடையறப் பொழிந்தநீர் வெள்ள
மெங்கு மொப்பநன் கியங்கியு முட்கொளா வியல்பாற்
றங்கு மேதினிக் கினிமிகை யென்பது தகக்கொண்
டங்கு நின்றுவான் கடலகத் தடுத்ததை யன்றே. (உச)

போற்ற வாமுட லூழனு பவித்திடும் பொழுதே
யேற்ற மாகவா காமிய மீட்டுறு முயிர்போ
லாற்ற மாமழை பொழிந்தநீர் தேங்கவு மவாவி
யூற்ற மார்நதிப் புனல்கொளு மேரிக ளுலப்பில். (உரு)

வாரி வாய்க்கொடு மழைபுனல் பொழியுமென் றறிந்துஞ்
சீரி யோர்களவ் வாரியைப் புகழ்திறஞ் செய்யார்
நாரி பாகர்தம் பெருந்துறைத் தளிப்பணி நகுதார்
மூரி வேம்புடை யான்பணி யென்றெவர் மொழிவார். (உசு)

அலங்கு ஞாயிறு தோன்றலு மிருளழிந் தாங்கு
நலங்கொள் காலேயு மாலேயுந் தவிர்ந்துநண் பகலி
லிலங்கு மாறுதித் தியாவர்க்கு நனிவெதுப் பியற்றும்
பொலங்கொள் பாலேகா ருதித்தலு மழிந்துபோ யிற்றே. (உஎ)

மாய காரியப் பொருள்களே மடந்தையோர் புறத்து
நாய னூர்கொளக் கொடுத்தவர் நவிலொணு வின்ப
மாய வான்பயன் பெறுதல்போ லுவர்க்குநீ ராழி
மேய கார்முகிற் குதவிப்பின் கவர்ந்தது விழைநீர். (உஅ)

விழைக லத்தகார் காலமா கியபெரு வேந்தன்
றழைய மண்ணிறுத் தமைக்கமை தவாப்பட மாடங்
கழைகொண் மால்வரை யதன்புறத் திடைவிசி கயிறு
பிழையி லாமணி கொழித்திழி யருவியின் பெருக்கம். (உகூ)

எவ்வு யிர்க்குமா தாரமா மழைவர வெதிர்ந்து
செவ்வி சான்மயி லகவின கோகிலந் திகைத்த
வவ்வி யம்பெருக் கவுணியர் வரவெதிர்ந் தளவில்
சைவ ரேத்திட வமணரா தியர்திகை தகைபோல். (௩0)

சந்த மால்வரைப் பாண்டிநன் னுட்டிடைத் தவாம
லிந்த வாறுபெய் மழைவள மியாரெடுத் திசைப்பார்
நந்த வாகிய வைந்திணே வளத்துளு நயப்ப
முந்த வாங்குறிஞ் சித்திணே வளஞ்சில மொழிவாம். (௩க)

குறிஞ்சி.

வரைப யந்தவண் மகவெனப் படன்மயி லூர்தல்
வரைய மைந்தமான் மகட்புணர் விவைமதி யான்போல்
வரையெ றிந்தன னெனத்தவ நிலேநின்று வயக்கி
வரைகள் சேயிடங் கொளப்பொலிந் தோங்குவ மாதோ. (௩உ)

அருவி யார்தரு சாரல்வாய்ப் பஃறரு வமைய
மருவி மென்மலர் தோற்றுவ வேண்முடி வைப்பான்
வெருவி வண்டுக ளுருவிதம் விலக்குவ வேங்கை
பொருவில் சண்பக மற்றவை சூழ்தரப் புணர்ந்தே. (௩௩)

புனேம ணித்தொகை வரன்றின ரோரிடைப் போகட்
டினேவி லாத்தினே வளநனி போற்றுவ ரெயினர்
நினேத ருந்தரந் தெரிதரார் பாற்படி னிகரி
லனேய தாமுயர் பிழிபிழி புயர்பென வாமால். (௩௪)

நிறுவ றற்குழற் கொடிச்சியர் கவண்மணி நிறுவித்
துறுகு ரற்கொள்புள் ளிரிதரச் சுழற்றுபோ தொருகா
லறுதி றத்தினேந் தொழிதர மணியவண் வீழு
மறுகு பாம்பினேச் சுழற்றவாய் மணியுதிர்ந் தென்ன. (௩௫)

ஓங்கு சாரலிற் றவழ்மதிப் பிறைவழுக் குற்றுத்
தேங்கு நீர்ச்சுனை யகம்விழ நவ்வென்று சினைமேற்
பாங்கு வாழ்குரங் கொன்றதன் மேலுறப் பார்த்தோ
ரீங்கு நின்பெயர் குரங்கியென் பஃதுமெய் யென்பார். (௧௬)

எவ்வ மில்லராய்ப் பெற்றது கொண்டுவப் பெய்தல்
செவ்வி யோர்கட னெனநெளித் தாங்குறு செவ்வி
நவ்வி நோக்குடைக் குறத்தியர் நயந்தடை யுடுப்பா
ரொவ்வ தில்லெனப் புன்றினை புன்கிழங் குண்பார். (௧௭)

மேய வெண்பிறைக் கோட்டுடை தேத்தடை விடுக்கும்
பாய வின்மது வருவியா னையின்கடாம் பரப்புற்
றூய செம்மையால் வெண்மையாற் கருமையா லன்றித்
தோய யாவரும் பகுத்துணர் தரத்தரோ சொல்லில். (௧௮)

மந்தி முன்செலப் பெரும்பலாப் பழச்சுளை வவ்வி
யுந்தி யுள்ளிடைக் கடுவன்பின் புகவுண ராம
லந்தின் மற்றொன்று புகவெளி வந்துடன் றமர்க்கு
முந்தி மாதவாய்க் கவியிரண் டமர்த்தவோர் முறைபோல். (௧௯)

கயமு னிக்குலம் பிணைத்தனர் வட்டமாய்க் கனமே
வியவ றைத்தலைத் தினைக்குரல் பரப்புபு மிதிப்ப
வயம றச்சிலை யெயின்குடி விடமுகின் மருண்டு
பயமி குத்தொரு சிறைப்புகூஉ வுருமொலி பரப்பும். (௨௦)

கடமை பன்றிமான் முதலிய மிருகவூன் கவர்ந்து
சுடர்கொ ளுந்தழற் காய்ச்சுபு தேனிற்றோய்த் தருந்து
மடமை யென்னெனக் கிராதரை யிகழவா யுண்டோ
படவ ராவணி காளத்தி யார்செயல் பார்த்தும். (௨௧)

கொடியி டைக்கொடிச் சியர்முலைக் கோட்டினுக் குடைந்தே
நெடிய மால்வரைக் கோடுகெ ணீனிற முகிலான்
முடிய மூடப்பட் டொளித்திடு மூரிமா வியானை
வடிய கோடுகள் விளர்த்திடு மணியகம் பரித்தும். (௨௨)

பிண்டி யந்தளிர் வாடுதல் கண்டுபே துறவோர்
யண்டி யாரமென் னறுந்தளிர் கொய்துதம் மங்கைக்
கொண்டி ரங்கிநீர் கொண்மினென் றிரந்திடக் கொள்வார்
மண்டி யெங்கணுங் காவல்செய் புனங்களே வயங்கும். (௨௩)

உறும்ப லாயிர யோனிதோ றுதித்தன வாய
வெறும்ப லாவுயி ரியாவும்வாழ் திசைகுறித் திறைஞ்சுங்
குறும்ப லாவுடைக் குன்றமொன் றுடையது குறிஞ்சி
தெறும்ப லாயிர வாயினன் செப்பலு மாமோ. (௨௪)

வான மேவிய வாழ்க்கையர் புனிஞராய் வந்து
தான மெங்கணும் விராவுறுந் தடங்கொடுங் குன்ற
மேன நாடொணூர் ஞாலமுற் காட்டியாங் கிருப்பின்
மான மாருமக் குறிஞ்சியின் றவத்தையார் வகுப்பார். (சரு)

இகல வாவுதோட் சூருயிர் குடித்தவெம் மிறைவன்
சகல யோனியு மின்புற யானைதோ டமூவி
யகல மார்பரங் குன்றிடை யமருமேற் குறிஞ்சி
புகல வல்லரியார் முல்லையின் வளஞ்சில புகல்வாம். (சசு)

முல்லை.

மானு ருத்தபுத் தான்முனம் வாளியா லெனினு
மானு ருத்தமூஉம் வாஞ்சைய ஞதலி னவஞன்
மானு ருத்தழை விப்பதை யெண்ணுபு மாலை
மானு ருத்தகான் றெய்வமாக் கொண்டது மாதோ. (சஎ)

மாய வன்வனங் காத்திட வ்திதலின் மயக்க
மாய தெய்திடா வண்ணமரங் கமருவ வனமீப்
பாய கார்முகி லவன்வடி வொப்புமை படர்ந்து
நேய மோடவட் பயிலுவ பெயலொடு நிலவி. (சஅ)

பரவு தேரசைந் தாடுமா லைகளெனப் பல்பூ
விரவு தொத்துக டேக்கிய மதலைகூ விளஞ்சார்ந்
தரவு மேவியோ திமமுரு தோங்கிடு திறத்தா
லரவு பூண்பவன் சடைவன மவ்வன மாமால். (சகூ)

மூவ கைத்தொழி லுளுமிடைத் தொழின்முயன் ருற்றுந்
தேவன் மேவலி னிடையரோ யாவயிற் செறிவார்
மேவ வானிரைத் தோழமும் விசைத்தெழு கன்றிற்
காவ தாகிய தீவுமாங் காங்குறப் பரப்பி. (ருO)

சாயு நுண்ணிடை யாய்ச்சியர் தளிர்க்கைமத் திட்டுத்
தோயும் வெண்டயி ருடைத்திடு துழனியாற் றுள்ளி
யேயு மோர்புதல் புகுமுயல் கலையத்தா னினப்பால்
பாயு மோதையா லயல்புகு நிலையிலார் பண்பின். (ருக)

முருகு வார்குழ லாய்ச்சியர் முளிபடூஉத் தோய்ந்த
பெருகு நின்றுகொள் வெண்ணெயைப் பிறங்கழ லேற்ற
வுருகு காலெழு மணங்குலா வலினுறு மாங்கு
வெருகு சூழ்வன யந்திரம் புனைந்தவெள் ளேற்றில். (ருஉ)

இனித்த வேய்ங்குழ லோதையு மேறுபூண் மணியும்
பனித்த மாலையு மௌவல்வண் டேதலும் பசுங்கார்
குனித்த வில்லொடு தோன்றலுங் கோகிலத் தொழிப்புங்
னித்த மங்கைய ரிருக்கைசாய் கூற்றெனுந் தகைய. (ருங

தொறுவி மார்மொழி பயின்றிடக் கோகிலத் தொகையு
மறுவில் வாணகை யரும்பிட வயங்கிய தளவு
நிறுவு வார்குழல் கனிந்திட நேயஞ்சார் களவு
மிறுதி யில்வனத் திறுதியில் லனவென வியையும். (ருச)

கோடு கூரிய கொழுவிடைப் புறம்பொலி யிமிற்குங்
கூடு மாய்ச்சியர் கலம்பொலி குடம்புரை முலைக்கு
நாடு திண்டிறன் மதனுடைக் குறும்பொறை நாடர்
நீடு தோளிணை யுயர்ந்தவொத் தனவென நிலவும். (ருரு)

எள்ளுஞ் சாமையு மவரையுந் துவரையு மிறுங்குங்
கொள்ளு முற்கமுங் கோத்திர வமுங்கொழும் புல்லுந்
தள்ளு நீர்மையின் றிடந்தொறும் பொலிவன தவாமே
நள்ளு மால்வரை கானக நண்ணிய வென்ன. (ருசா)

தூய கூவிளங் குருந்துவண் கடுக்கைபைந் தூர்வை
மேய வானிலைந் தோடுகொன் யாற்றறல் விரைமிக்
காய முல்லையின் களம்பழ முதலமை தவிஞன்
மாய வன்சிவார்ச் சனைசெய வகுத்தமை போலும். (ருஎ)

போற்று மாயவன் மேனியின் கருமையைப் புகழ்கோ
சாற்று பூவையிற் றதைந்தபூக் கருமையைப் புகழ்கோ
வாற்று மாய்ச்சிய ரணிகுழற் கருமையைப் புகழ்கோ
தேற்று செங்கதிர்க் கிரணமுங் காரெனச் செய்யும். (ருஅ)

நானப் பேருங் கடிக்குழ னங்கைய ரோடுந்
தானப் பேரர சாதியர் தவாதுவந் திறைஞ்சி
வானப் பேர்முடி யாயென மருதருள் வழங்குங்
கானப் பேருறத் தவம்புரிந் ததுகமழ் புறவம். (ருகூ)

அல்லை வென்றிகொள் கந்தரச் சுந்தரத் தண்ண
லெல்லை யில்லதாம் பேரருள் சுரந்தினி திருக்குந்
தொல்லை வைப்பென லாயவா டானையுந் துவன்ற
முல்லை மாதவஞ் செய்ததேற் பிறிதெவன் மொழிவாம். (சூ0)

வேதம் யாவையும் பிரணவப் பொருளெனல் விளக்கப்
போத நாயகன் மதலையை யுவந்தமர் புத்தூ
ரேதந் தீரக்கொண் டமர்வனத் தியல்பினென் னுரைத்தாஞ்
சீத மார்வய னிலவளத் தினுஞ்சில தெரிப்பாம். (சூக)

மருதம். வேறு.

அருமணி வைரம் வாரி யகருவுஞ் சந்துஞ் சாய்த்துக்
கருமதக் களிற்றுக் கோடு கையரிக் கொண்டு விண்டோ
யொருவரை நின்றுங் கல்லென் றிழிந்துறப் பரந்து வாரிப்
பெருவயி றகங்கு ழம்பப் பெருகுறும் பொருநை யாறு. (சூஉ)

பிறைமுடிக் கணிந்த வெங்கள் பெருந்தகைச் சுந்த ரேசர்
நிறைதவில் குழிவ யிற்றுக் குறட்குநீர் நசைத ணிக்க
முறைமுன மழைத்த வாறின் றழைத்தனர் மொழியின் மண்ணு
மறைதரு மிதனுலென்ன வையையும் பெருகா நிற்கும். (சுங)

கங்கையின் பெருக்கோ தெய்வக் காவிரிப் பெருக்கோ வன்றிச்
செங்கையி னுடல் கொண்டார் திருவருட் பெருக்கோ வெற்பன்
மங்கைதன் னருட்பெ ருக்கோ மற்றிஃ தெதற்கொப் பென்னச்
சங்கையின் ருய்ப்ப ரந்து பெருகுறுந் தனிவெள் ளாறு. (சுச)

பெருகிய நதிநீர் வெள்ளம் பெருமத கூடு சென்று
மருவிய வேரி புக்காங் குறுமத கூடு சென்றுந்
திருவியல் கழனி யெங்குஞ் செறிந்துபல் லுயிர்க டோறு
மொருபரம் பரன்வி யாபித் துறுதிறங் காட்டிற் றன்றே. (சுரு)

அளப்பரு முயிர்கள் செய்யு மன்பினுக் கேற்ப யாரு
மளப்பரு மான்ம நாத ரருணிறைந் தென்ன நாட்டு
ளளப்பருங் கழனி கொள்கைக் கியைதர வாற்று வந்த
வளப்பரு நீர்நிறைந்த தார்த்தனர் களம ரெல்லாம். (சுசு)

சாதியின் றமையா தானஞ் சாதிசெய் வினையென் றோர்ந்தாங்
கோதிய பழையர் பாற்போய் வாய்க்கடை வழிய வுண்டு
மோதிய மூவ ருள்ளு முழுப்பல விராம னென்னக்
காதிய வலந்தோண் மேற்கொண் டெழுந்தனர் களம ரெல்லாம். (சுஎ)

நுகநடு வேர்க்கால் சேர நோன்மையிற் பொருத்தி நத்தந்
தகமிளிர் கருங்க டாக்க டாழ்வுயர் பொழியப் பூட்டி
மிகமிளிர் தரவி டக்கை மேழிபற் றுபுவ லக்கை
யகமொரு முட்கோல் வாங்கி யார்த்துழு தனரான் மள்ளர். (சுஅ)

புரத்தல்செய் பவனில் லாய புடவிமெய் வடுவ னைத்தும்
பரத்தல்செய் யாமற் செய்கை பாங்கெனக் க்ருதி யாங்காங்
குரத்தமுன் னோர்க டக்கு முறுவிளாப் படைச்சான் மாய்க்குந்
தரத்தது பின்னோர் பின்னுஞ் சார்வவத் தகைய மாதோ. (சுகூ)

குறிகொளும் பகட்டு நாஞ்சிற் கொழுமுகங் கிழித்துச் செல்லச்
செறிபசும் புற்க ளாதி யாவையுஞ் சிதைந்து மாய்ந்தே
முறிதரு மூழ்த்த லெய்த முடியவு மாறி மாறி
நெறியுழு தொழின்மு யன்றார் நெடும்பணை யெலாஞ்சே றாக. (எ0)

தழைதரல் புரிப வணக்கியாந் தழைதரன் முறையே யென்று
குழைதரு தழைக ளாய்ந்து கொடுவந்து நனிப ரப்பி
விழைதர மிதித்தல் செய்து மேயகங் கரிந்து யர்த்திப்
பழையதீ தகருத் தேய்த்த பான்மைய தெனச்செய் தாரே. (எக)

கரம்புகா ணரிய தாக்கி மேடவல் கழியு மாறு
பரம்புமேற் கிடத்தி யூர்ந்து பாறிய தோட நாளில்
வரம்புறு வரம்பில் செய்யும் வாழ்கவென் றிறையை வாழ்த்தி
நிரம்புசென் முளைவி தைத்தார் நிரப்பெனு முளைசி தைத்தார். (எ௨)

கலங்கனீர் தெளிதல் கண்டு கவிழ்த்திளம் பருவச் சேயி
னலங்கிளர் பசியு ணர்ந்து பாலூட்டு நற்றாய் மான
விலங்குறு மள்ளர் நன்னீர் வேண்டிய காலத் துய்ப்பக்
குலங்கிளர் முளைக ளெல்லாங் கூழென வளர்ந்த வன்றே. (எ௩)

ஊறுதீர் பருவ நோக்கி நாறெலா முறப்ப றித்துச்
சேறுதீர் முளையின் மோதி முடிசெய்தோ ரிடச்ச ரக்கை
வேறுவே றிடத்தி னுய்க்கும் வாணிகர் விழைய மள்ளர்
மாறுதீர் பணைக டோறு மதித்தனர் சுமந்துய்த் தாரால். (எ௪)

ஆய்பிழி மாந்தி மீன்க ணளவும்வெற் றிடமின் றென்ன
வேய்புரை திரடோ ளாற்றுக் காலாட்டி மார்வி ராவிச்
சாய்தர நாறு நட்டார் சாய்வொழித் திடுக மக்குத்
தோய்தரா திதுவென் றம்ம நிமிர்ந்தன தோகை காட்டி. (எ௫)

முளைவிளர்த் தப்பாற் பச்சென் றாயதோர் முறைமை போலத்
தளைதொறு நாறு வெள்ளென் றாய்த்தனி பசப்பிற் றங்கக்
களைவருந் தவத்திற் கூறாக் காமமா தியசார்ந் தென்ன
விளைசரோ ருகமுன் னாய பற்பல மிடைந்த வன்றே. (எ௬)

களைகளை பருவ மென்று கடைசியர் தம்மைக் கூவித்
தளைதொறு மள்ள றாய்ப்பச் சார்ந்துவெள் ளோதி மங்கள்
விளைநடை கற்பா னெண்ணி விழைந்துபின் றொடர வாங்காங்
களைபல களைக ளெல்லாங் கொல்லுவா னமைந்தா ரன்றே. (எஎ)

பேருற வுற்ற போதுஞ் சிறுபகை யேனும் பேணார்
சீருற வுயர்ந்தோ ரல்லார் செத்தவ ரென்றன் மெய்யே
யோருமா லுந்தி யாயு முழத்திய ருறுப்பு நள்ளாச்
சாருமோர் பகையான் மாண்டு சாய்ந்தவம் புயங்க ளெல்லாம். (எ௮)

நகமெனுந் தோட்டி யாலே நக்கவெள் ளாம்ப லெல்லாந்
தகவொறுத் தனர்கை யேவாற் றாமரை பலவுங் கொன்றா
ரகநிமிர் புல்லின் மேலா லங்கிரி யெடுத்து வைத்துட்
புகவடர்த் தனர்மற் றின்னும் புரிந்தவைக் களவுண் டாமோ. (எ௯)

நெடியபுண் டரீக மங்கோ கனகநீ லோற்ப லஞ்சூழ்
கடியரக் காம்பல் வள்ளை முதற்களை கின்ற யாவுங்
கொடியவென் றொருபேர் பெற்றுக் கடைசியர் கொல்லப் பட்ட
படியிலெவ் வுயிர்க்குந் தீதே கொடியன வெனும்பேர் பற்றல். (௮0)

சிலமலர் குழலில் வேய்ந்தார் சிலமலர் கழுத்திற் சேர்த்தார்
சிலமலர் கையிற் கொண்டார் சிலமலர் மோந்தெ றிந்தார்
சிலமலர் வாயின் வைத்தார் சிலமலர் வரப்பி னுய்த்தார்
சிலமலர் கான்மி தித்தார் தராதரந் தெரிந்தா ரானோர். (அக)

விண்ணமை பவர்க்கூ ருஞ்சு ராதியர் விளிந்தாற் போல
மண்ணமை பயிர்க்கூ றுய களையெலா மாய்ந்த பின்ன
ரெண்ணமை யுலோப மில்லா ரிரும்புகழ் பணைத்தாற் போலக்
கண்ணமை கழனி யெல்லாம் பணைத்தன கழைகொ லென்ன. (அஉ)

இளங்கருக் கொடுமு திர்ந்து வயிரநெட் டிட்டி போலுந்
துளங்கருந் தோற்றங் காட்டி வெளிப்படூஉத் துவன்றி நின்ற
வளம்படு கதிர்க ளெல்லா மதிவிடு கதிர்வி ராவி
யுளங்கொளக் கனத்துச் சாய்ந்த வுயிரெலா நிமிர மாதோ. (அ௩)

கொல்லரம் பயின்ற தாய கொடும்பிறை யிரும்பு கைக்கொண்
டொல்லெனக் கழனி தோறு முழவர்க ளொருங்கு புக்குச்
சொல்லெனப் பட்ட வெல்லாந் தூரகத் தரிந்து சாய்த்தார்
வல்லையின் வரிந்து சென்னி வைத்தனர் களத்துச் சேர்ப்பார். (அச)

பாகசா தனன்சி னந்து பருப்பத மனைத்துந் தள்ளி
மேகவா கனத்தைக் கூவி மிதித்திட விடுத்தன் மான
மோகமார் நெற்போர் தள்ளி மொய்கடாப் பிணையல் செய்து
வேகமா மிதிக்கச் செய்தார் வெவ்வலிக் களமர் மாதோ. (அ௫)

ஊர்தரு மிறைவன் மெய்வே றுயிர்வேறு படுத்தன் மானச்
சார்தரு கடாவை வேறு நெல்வேறு சமைக்கக் கண்டு
போர்தரு திண்டோண் மள்ளர் பொருந்திய பலால நீக்கி
யார்தரு நெற்கு வித்துத் தூற்றின ரளவை செய்வார். (அசு)

கொற்றவ ஞறி லொன்று கொளக்கொடுத் தறங்க ளெல்லா
மற்றமின் றுகத் தொன்று தொடுமுறை யமைய நல்கி
மற்றதை வாரித் தத்த மனைவயி னுய்க்கு மார்ப்புக்
கற்றவர் புகழ்வின் ஞடு காதுகை பொத்தச் செய்யும். (அஎ)

கழைவடி சாறு காய்ச்சிக் கட்டிகொள் வாரு மிஞ்சி
விழையரி சனமுன் னுய வேறுபல் வளங்கொள் வாரும்
புழைமனப் பொதுமா தோடு புதுப்புன லாடு வாரு
முழைவிழிக் கிழத்தி மார்த மூடலை யுணர்த்து வாரும். (அஅ)

இறைபுரி யாட லெட்டெட் டியற்றுவா னேற்றமாக
முறைமையி னெவர்க்கு முந்தி முளைத்தவைப் பாய மூதூர்
நிறைசிவ லோக மென்ன நிகழ்திரு வால வாய்தண்
டுறைகெழு மருதத்துள்ள தெனிலினிச் சொல்ல லென்னே. (அகூ)

மாவண மேனிப் பொன்போல் வாளுகிர்க் குறிக போலத்
தேவண ழாலாக் கொண்டா ரேற்றினி தமரு மூதூர்
பூவண மென்ப தந்த மருதத்தே புணரு மென்னி
ஞ்வணச் செம்மை யாரு ளியாவரே நயக்கி லாதார். (கூ0)

ஆடக மிளிரும் வையை யருகிற்சை வந்தா பித்த
வேடகங் கொண்ட தாய வேடக மாப்ப னூர்முற்
கூடகங் கொண்ட மென்பால் வளத்தெவன் குறித்துச் சொற்று
நாடக நிகழு நெய்தல் வளஞ்சில நவில லுற்றும். (கூக)

நெய்தல்.

மழைவளஞ் சுரந்து விண்ணு மண்ணும்வாழ் தரச்செய் கொண்மூ
விழைதரு முணவு நல்கு மேன்மைமிக் குடைய தாகிப்
பழையமா நதிகட் கெல்லாம் பதியெனப் பட்ட வாரி
யுழையுறப் பெற்ற நெய்த லோம்புவன் வருண னாளும். (கூஉ)

பொருசுறு மருப்பொன் றூன்றிப் புன்னையம் போது சூட்டிப்
பெருகமீ னுணவு நல்கிப் பேணுபு வணங்குந் தோறும்
வெருவறக் கோட்டி னின்றும் வெளிப்பட வருணன் றோன்றித்
திருவமப் பரதர்க் கீயுஞ் சிலைத்தல்வான் செவிடு செய்யும். (கூங)

இரும்பினைத் திரித்தா லன்ன விருங்கருங் கோட்டுப் புன்னை
யரும்புகொள் குடுமி பற்றி யந்துகிர்க் கொடிவ ளைப்பக்
கருங்கடற் றிரையெப் போது மறைவது கண்டு மாங்கே
விரும்பியல் குவவி லாபம் விளைவதை யறிகி லேமால். (கூச)

இடர்தப வாரி மேய விருஞ்சுற வாதி மீன
மடர்வலை வீசிக் கோற லன்றியுந் தூண்டி லிட்டுப்
படருறக் கோறற் காகப் பரதவ ரமைத்தாற் போலுந்
தொடர்புடைப் பகன்றை யெங்கு மரும்புக டோற்றுங் காட்சி. (கூரு)

இறையவன் சினக்கு மாறென் றியற்றியா மிழிந்தா மேனு
மறைகட லுவக்கு மாறென் றுற்றிமிக் குயர்வா மென்று
முறையுற வெண்ணித் தாழை மொய்பல புலவு மாறக்
குறையறப் பூத்தெண் டிக்குங் கொளப்படும் வாசம் வீசும். (கூசு)

தளிர்படு பிண்டி வைப்புந் தவாக்கொடி முல்லை வைப்பு
மொளிர்செழுங் கமல மாம்பூ வுற்றதண் மருத வைப்பு
மிளிருண வாக்கா நீலம் விராயதே யாக்கு மென்று
குளிர்திரை நெய்தல் வைப்பிற் குடிகொளுங் காகப் புள்ளும். (கூஎ)

திரையெடுத் தெறியுஞ் சங்குஞ் செழுந்துகிர்த் திரளும் விண்மீன்
புரையொளி முத்து மற்றும் பொருந்துவ வனைத்துங் கொள்வான்
கரையகஞ் செறியும் வண்ண கங்கள்பொற் பொதிய விழ்க்குந்
தரையிது கண்டும் புன்மை யடைமொழி சாற்ற லென்னே. (கூஅ)

ஓரொலிக் குவமை சொல்லி னுலகஞ்சூழ் பரந்த வாழி
யாரொலி யுரைப்பர் கற்ற வறிவுடை யவர்க ளியாரும்
பாரொலி நிகழு நாவாய் பற்பல படைத்த லாலே
பேரொலி யுடைய தென்று பேணுபு மதித்தார் போலும். (௯௯)

நல்லவை நல்ல செய்யு நாட்டவர் மதிக்க நாளு
மல்லவை யல்ல செய்யு மென்பதை யறிந்தா மன்றே
பல்லமுண் டகம்புன் னாகம் பானனல் வாசம் வீசு
முல்லமுன் னாய பன்மீ னுற்றநீ வாசம் வீசும். (௧௦௦)

நல்லது தீய தோடு நண்ணுறிற் றீய தாநன்
கல்லது நல்ல தோடே யணுகுறி னல்ல தாகு
மொல்லுநன் னீல மீன்சார்ந் திறுபுலா னாறு மீனும்
புல்லுநீ லஞ்சார்ந் தேநன் மணநாறு மிகுபு ணர்ப்பால். (௧௦௧)

மழைவளம் வேண்டி நிற்கு மறுநிலத் தவர்போ லாது
விழைவள நமக்கீதென்று வெயில்வளம் வேண்டி நிற்குந்
தழைதொழி லுமணர் தம்மாற் றரப்படு முப்பி னேங்கல்
பிழையற வெவரும் வேண்டும் பெருஞ்சுவை யாயிற் றம்மா. (௧௦௨)

உருவள மிரண்டி னாலு முறப்பெரி யவரே யானும்
பருவரல் கண்டுஞ் சற்றும் பயன்படா ரவ்வி ரண்டு
மருவிய சிறிய ரேனும் பயன்படு வாரு முண்டாற்
பொருதிரைக் கடல்சிற் றூறற் கேணியாற் பொருந்த வோர்ந்தாம் (௧௦௩)

சிலைவலி யிராமற் குற்ற பாதகந் தீர்த்த மேன்மை
நிலைமரு விராமே சஞ்சீர் நிலாந்தனுக் கோடி யோடு
மலைவற வைக நெய்தன் மாதவஞ் செய்த தென்னிற்
கலைவலீ ரனைய நெய்த னிலப்புகழ் கரையப் போமோ. (௧௦௪)

வரையிரு சிறகு மாய்த்தான் வானக வாழ்க்கை மேவிக்
கரையறு மகிழ்ச்சி யெய்தக் கைமல ரொருவே றொட்ட
விரைகமழ் கடப்பந் தண்டார் மேலவன் செந்தில் வைப்புந்
திரையெறி நெய்தன் மேய தெனிலினிச் செப்ப லென்னே. (௧௦௫)

நனியருள் சுரக்குந் தீர்த்த நலமெலாந் தன்பாற் கொண்ட
புனிதமல் கியபே ராழி பொருந்திய நெய்தன் மேன்மை
தனிலெவ னுரைத்தாங் கொற்றி தனியர சிருக்கப் பெற்ற
கனியழற் சுரமாம் பாலை யினுஞ்சில கரைவா மன்றே. (௧௦௬)

பாலை. வேறு.

பாலை யென்பது நானில மருங்கினும் பரல்கூர்
மாலை வன்றிட ரேமுது வேனில்வாய் மாலை
காலை தீர்ந்துவெங் கதிர்சுடு கடும்பக லாய
வேலை வெப்பமிக் காய்நினைப் பினுஞ்சுடும் விறற்றே. (௧௦௭)

ஈந்து மேய்சிறு குரம்பையாங் காங்குற விளையத்துப்
போந்து வாழ்குவர் மறத்திய ரோடுபுள் ளுவர்கள்
காந்து வெஞ்சின விந்தைதா டொழுந்தொறுங் கடும்போர்
நீந்து வன்றிற லளித்திடப் பெற்றநீர் மையராய். (௧0௮)

சுரநி லத்தமர் தரினுமா றலைத்திடு தொழிலாற்
பரவு நானிலப் பொருள்களு மிறுக்கர்கைப் பற்றி
யுரவு மேவுற நுகருவர் கல்லுண வுண்டு
விரவு மென்புறு வுயர்தல்கண் ணுேக்கியும் விடாரால். (௧0௯)

கொடுமை யாளரே யாயினுங் கூடுப காரப்
படுவ துண்டுகேர்ச் சூரத்தா னெல்வியாற் பலவா
யிடுகே ணிக்கள விலைவிளைப் பாடல மதுவாற்
றெருடுவ றுங்கிணற் றகநிறைத் திடுவதச் சுரமே. (௧௧0)

இந்த நாடுகாப் பவன்றிர டோண்மிசை யிவர்சம்
பந்த முண்மைதேர்ந் தாவயின் வேம்புகள் பரவு
மந்த நாயகன் சிவக்குறி யவாவலோர்ந் தறியச்
சந்த மார்கனி கிளையெலாந் தழைதரப் பழுக்கும். (௧௧௧)

எருவை பேட்டிற்குச் சிறகரால் வெயின்மறைத் தியங்கிப்
பொருள்க ருத்துறப் போமவர் செலவழுங் குவிக்குந்
தெரிய வாவயி னியங்குவான் சென்றநெட் டராக்கள்
புரிமு றுக்குடைந் தாலெனப் புரளுவ போகா. (௧௧௨)

இலங்கை மாநகர் வாழ்நருள் வீடண னென்னத்
துலங்கு மாவயிற் கன்னிகா ரம்பல துவன்றி
நலங்கொள் காதலர் பின்றொடர் நங்கையர் வருந்தா
தலங்கு சீறடி யின்புறப் பஞ்சிக ளமைக்கும். (௧௧௩)

ஓங்கு நம்பெய ரிங்கில முற்றதென் றுறந்து
வீங்கு பாலைக ளாவயிற் பழுப்பன மேன்மே
லாங்கு மேவியக் கனியுணில் வெளிப்படா ததர
நீங்கு ருமலோட் டத்தொடும் பொருந்துத னிசமே. (௧௧௪)

இன்ன பாலைவெந் தழலெனக் கொதிப்பினு மிகழார்
முன்ன மாலைய ளுடிய தெதையென முன்னி
லன்ன பாலைசால் வளத்திலென் னறைந்தன மறைவாஞ்
சொன்ன நானிலத் தைந்திணை மயக்கமாந் தொடர்பும். (௧௧௫)

## திணைமயக்கம்.

வளைகொள் பாகன்மேற் படர்தரு கறிக்கொடி வாவி
விளைகொண் முல்லைநீள் குருந்தின்மேற் படர்தர மேவிப்
புளைகொண் மஞ்ஞைகான் வாரண மெதிர்புரிந் தியங்குங்
களைகொள் கூத்தியர் கயிற்றெதி ரெதிர்நடப் பதுபோல். (௧௧௬)

மேய வான்குழக் கன்றுண லொழிந்தபின் விபோ
லாய தோரவ லகம்புக வவ்வவ லகத்தே
பாய மாமரு தக்கத விக்கனி பலவுந்
தோய வீழ்வது கண்டுல கெடுத்தின்னுஞ் சொல்லும். (கக௭)

செய்ய முண்டகச் செய்வள ரோதிமச் சேவன்
மெய்யி னெய்தன்முண் டகத்துகு மகரந்தம் விராவத்
தைய லார்பெடை புதுக்கடித் தன்மைதேர்ந் தூட
வைய மற்றஃ தடிக்கடி தாள்பணிந் தணையும். (கக௮)

அலையு றும்பவ ளக்கொடி செழும்பணை யகத்து
நிலைபெ றும்வய லைக்கொடி நெடிபடு முல்லை
மலைவில் பூவையைத் தழுவுவ மாலைமா மகளு
முலைவில் பூமக ளுந்தழீஇ யுவப்பதை யொக்கும். (ககக)

கடலெ றிந்திடு தரளமென் கரும்பெறி தரள
மிடல்கொள் வேழவெண் மருப்பெறி தரளமான் மிளிர்பல்
விடல்செய் முத்தமற் றிவைமதூ கத்தல ரியைய
வடன்ம றத்தியர் வாரியோர் கறையில்விட் டவைப்பார். (க௨0)

நன்ன ரிவ்வள மலிதரு குலத்திணை நான்கு
மன்ன வெவ்வகைக் குடிகளு மரபுளி வைகச்
சொன்ன மேயெனத் துலங்கிடும் வழுதிநாட் டுறுசீ
ரென்ன சொற்றன நகர்வளத் தினுஞ்சில விசைப்பாம். (க௨க)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் க௫௮.

---

# திருநகரப்படலம்.

---

பேசரும் வளத்தான் மிக்குப் பிறங்குறு வானங் காப்போன்
றேசமை வாழ்க்கை வேண்டேஞ் செய்யதா மரைமே லண்ணல்
வீசரும் வாழ்க்கை வேண்டேம் விண்டுவின் வாழ்க்கை வேண்டேம்
வாசகப் பெருமான் செம்பொன் மலரடி வாழ்க்கை யோமே. (க)

வேறு.

நிலமெ லாம்புகழ் நெடுநகர் பலவுளு நிணைந்த
பலமெ லாந்தரு நகரமுஞ் சிலவவை பரவ
வலமெ லாம்பொலிந் துயர்ந்ததொன் றேயென வயங்கு
நலமெ லாம்பொலி நாம்புகழ் பெருந்துறை நகரம். (உ)

கூட்ட வல்லது பல்வகைக் குடியையுங் கூட்டி
யூட்ட வல்லது பல்வகைப் போகமு மூட்டிக்
காட்ட வல்லது புண்ணியப் பொருளினைக் காட்டி
நாட்ட வல்லது கயிலையிற் பெருந்துறை நகரம். (௩)

நீடு வானவர் குழாத்தொடு நிகழ்மக வானுங்
கூடு முண்டகா சனத்தனுங் கொண்டன்மே னியனும்
பாடு மெல்லையி னிறைஞ்சியுட் புக்கனர் பரவ
நாடு மான்மியம் படைத்தது பெருந்துறை நகரம். (௪)

அறிய வானவ ரியாவரும் வீதிதோ றணைந்து
செறிய வீழ்ந்துவீழ்ந் தடிக்கடி பணிந்தெழு திறத்தான்
முறிய கற்பக நாறுறு முண்டகத் தோடு
நறிய பைந்துழாய் நாறுறும் பெருந்துறை நகரம். (௫)

ஒளிகு லாம்பல விமானமு மதப்பெருக் குண்ணு
வளிகு லாங்கவுள் வெள்ளைவா ரணமும்வெள் ளனமுங்
களிகு லாங்கலு ழனும்புற நகர்த்தலை காப்ப
நளிகு லாம்வளம் படைத்தது பெருந்துறை நகரம். (௬)

மதிசெய் வெள்ளிய மாடமு மாடமேன் மதியுந்
துதிசெய் வாலிய கொடிகளுஞ் சூழமுத் தார
நிதிசெய் மாலையும் படைத்தமைக் கேற்பநீள் வெள்ளை
நதியு மோர்புறம் படைத்தது பெருந்துறை நகரம். (௭)

மறைக ளாகமந் தோற்றலாற் பரமன்வாய் மானுங்
குறைத ராவொளி யாலநித் தியமுருக் குணத்தான்
முறையி னியாவரும் வணங்கலான் முதலவன் போலு
நறைவி ராவிய பொழில்சுலாம் பெருந்துறை நகரம். (௮)

ஆய விந்நகர் வளமெலா நோக்கிமிக் காசை
மேய தன்மையா லாசைமா நகரென்றும் வெறுக்கை
பாய தன்மையால் வெறுக்கைமா நகரென்றும் பகர்வார்
நேய மார்புல மையர்நிறை பொன்னக ரினையே. (௯)

எந்த மாநக ரெங்கணும் புகவியங் கிடுவா
ரந்த மார்சிறு துறையுறப் பற்றுவ ரிதனை
நந்த வெய்துநர் பெருந்துறை நயந்தகா ரணத்தா
லந்த மில்லதோர் பெருந்துறை யென்றதா லகிலம். (௧௦)

குரவு பூண்பவ ரியாவரோ யாயினுங் கொன்றைப்
புரவு வேணிய னேயெனப் பாவனை புரிவா
ரரவு சூடவ னேகுர வேற்றினி தமரும்
பரவு மாநகர்க் குவமையு முண்டுகொல் பார்மேல். (௧௧)

மதிமி லேச்சிய சடாடவிக் கடவுளை மதியிற்
கதிவி ருப்பமை யடியவர் சூழ்வது கடுப்பப்
பொதிவ ளத்தமை திருப்பெருந் துறைநகர்ப் புறத்தே
துதிவி ருப்பமை யிளந்தளி ரிரும்பொழில் சூழும். (கஉ)

மணிநி றத்தவன் மார்பமே வையமம் மார்பி
னணிக வுத்துவ மணிதிருப் பெருந்துறை யர்கும்
பணிசெ யம்மணி சூழ்தரு பைந்துழாய்ப் படலை
யிணிம திற்றிரு நகரிது சூழ்திகழ் சோலை. (கங)

ஆய சோலையின் மங்கைய ரம்மனை யாடப்
பாய வானர மதுகண்டு மாங்கனி பறித்துத்
தோய விண்ணக மெறிதரச் சுரரவை பற்ற
நேய மாரிவை மீடரா தென்னென நினையும். (கச)

பொங்கர் சூழ்பசுங் கமுகின்மேற் றுவுவ புளைதீர்
மங்கு ருச்செழுந் திரையவின் கொழுந்துமாத் திரமோ
பங்க மொன்றறப் பன்மலர் வாருபு பரவக்
கொங்கு கொண்டெழு சிதநதித் திரையலின் கொழுந்தும். (கரு)

சோலை வாய்நிலா மிலாங்கலித் தலையுமஞ் சுரும்பார்
மாலை மாதரார் மார்பமுந் தாங்குவ குரும்பை
பால வாமொன்று சிறுமையின் மறைப்புணும் பருமை
யேல வொன்றஃ துண்ணுமால் வேற்றுமை யிதுவே. (கசு)

வாவி வாளைதாய் வலிமுக மச்சுற வியற்ற
மேவி மற்றது தென்னையின் பழக்குலை மிதிப்ப
வோவி யப்பழ மாவிவீழ்ந் ததனையச் சுறுத்துந்
தாவி யாவரு மிடர்க்கிடர் செய்வது தகவே. (கஎ)

நெடிய கந்தியஞ் சூழல்வாய் நிலவுவெள் ளாற்றுக்
கடிய வெண்டிரை வளைப்பவீழ் பழம்பசுங் கதலி
முடிய வாங்குலைக் கூனக மோதுதல் முன்னாள்
வடியி ராகவன் வில்லுண்டை கூனுறன் மானும். (கஅ)

தெங்கு சேர்பொழின் மாயவ னிற்பது சிவனுந்
தங்கு செவ்விய தேத்தடை சக்கரம் போலு
மங்கு வெண்பிறை யொருபுறத் துறல்வளை யாகும்
பொங்கு செங்கதிர் நடுவுறல் கவுத்துவம் புரையும். (கசு)

நந்த னங்களி னுல்வகை மலர்களு நந்தி
மந்த மாருத மேற்றமர் தரக்கரு வண்ட
ரந்த மில்லென வீழுத லமரர்தே மென்று
முந்த வந்தவு ணர்கள்பொர மொய்ப்பது புரையும். (உ0)

மன்னு மேன்மைசா திருப்பெருந் துறைப்பெரு வளத்துண்
முன்னு றிற்சில பொதுமையின் மொழிந்தன மப்பாற்
றுன்னு மூவகை நகருளும் படைபல துதைந்து
மின்னு கின்றதா கியபுற நகர்வளம் விரிப்பாம். (உக)

புறநகர்.

யானைக்கூடம்.

கோடு கொண்டன மணியுடை யனமதங் குலவு
நீடு பேரரு வியவுருப் பெரியன நிலவு
மாடு வன்மைய வரைபொரூஉம் யானைநின் றிடுவெ
வீடு சான்றியங் கிடுவன வேற்றுமை யிதுவே. (உஉ)

கறைய டிப்புகர் முகவரை நின்றிடு கம்ப
லுறைதெ றித்திடு மதப்பெருக் குவட்டெடுத் திடலா
னிறையு மற்றது மூவகை யெனப்படு நிகழ்பாற்
பிறையு ணர்ச்சியர் வாரியென் றிட்டனர் பெயரே. (உங)

ஒரும ருப்புநால் வாய்க்கரி போகிய தண்ட
மருவு றக்கறை யடிச்சுவ டுறுவமற் றவற்றுட்
பெருகு றக்கடா நிறைதலாற் பெட்டளி யுண்ப
வொருத லக்கள்பன் மறையவர் கூடியுண் பதுபோல். (உச)

கறைகொள் காற்றொடர் கைத்தொட ரன்றியுங் கால்பன்
முறையெ ழுஞ்செவி யடித்தொட ரெதற்கென மொழிய
நிறைக டாம்பொழி குஞ்சர மியங்குறு நிலத்திற்
குறைவி லாக்கருங் கோலஞ்செய் தெனவவை குலவும். (உரு)

எதிர மேவிய மருவலர் மருவல ரென்னக்
கதிர்கொள் வானகக் கால்கொடு கசங்குற மிதித்தும்
பிதிர்செய் தீகிரி யாணமோ வாப்பெருந் தம்பி
யதிர யாத்தகூ டம்பல வயங்குவ வாங்கே. (உசு)

குதிரைப்பந்தி.

பரியெ னப்பலர் வேண்டலிற் பரியெனு மொருபேர்
தெரித ரப்பெறு குதிரைக டம்முருச் சிவணு
மரிபு ணர்ச்சிமெய் வடுப்படா விதமுளத் தமைத்தே
யிரித லற்றிடத் தோய்ந்துந்தோ யாவித மியங்கும். (உஎ)

பரிக்கு ழாங்கடன் முழக்கமீ ரிடத்தினும் பரவும்
விரிக்கு றெட்டலை குவிழ்தலை மற்றவை வீசுந்
தெரிக்கு முத்தினம் விலாழியிற் சிதருறை யெனினு
மரிக்கு மோர்வட வைப்பெயர் முரணுடைத் தன்றே. (உஅ)

சிறையி லாமலே பறந்துகொக் கென்னும்பெயர் தேற்று
மறையில் பூப்பின்றி மணந்துபா டலப்பெயர் வயக்கு
நிறையி லக்கண மேவியுங் கோரப்பேர் நிலவு
மறையு ளுதுமே லெழுந்துகந் துகப்பெய ராக்கும். (உகூ)

எங்க டம்முரு வாதிறு லெடுத்திட விளைத்த
திங்கள் சூடிமற் றதன்மிசைச் சிவணலா லனைய
வங்கண் மாலையான் மறைக்குமே லானென்ப ரதனு
னங்கள் வான்புகழ் பெரிதென நவிறல்போன் முழங்கும். (௩0)

பகைத்த மன்னவர் மணிமுடி மிசைக்குரம் பதிக்கு
முகைக்கும் வீரர்க்கு வெற்றியே நாடொறு முய்க்குந்
திகைத்த தன்மையில் வாம்பரி பற்பல செறித்த
நகைத்த மந்திர மாவயி னெண்ணில நண்ணும். (௩க)

## தேர்நிலை.

அம்பொன் செய்தகா லதன்மிசை வயிரஞ்செ யச்சா
லும்ப ரொண்பது மராகஞ்செய் பரப்புதன் மிசையே
நம்பு நீலக்கான் மிசையொளிர் மேதக நயந்த
பம்பு தேரெலாம் பூதமைந் தடுக்கிய படியாம். (௩உ)

வெற்ற மேபொரு ளெனக்கொண்டு விளங்குமே தகவாற்
கொற்ற மார்சயந் தனமென வொருபெயர் கூறிக்
கற்ற நாவலர் புகழுந்தேர்க் காற்கடுப் பதனுக்
குற்ற காற்கடுப் போரமைக் காற்கடுப் பொவ்வா. (௩௩)

அருக்க னென்பவ னுடொறு மாழ்கட லாழ்த
திருக்கு ருவொரு செலவன்றி மீடலுந் தெரிந்த
பெருக்க மாருமிப் புறநகர்த் தேரெனப் பிறங்கு
முருக்கு லாவுதேர் பெருவொரு நாணத்தா லன்றே. (௩௪)

விண்கி ழித்திடு முடியுமோர் வியாளமு நடுங்க
மண்கி ழித்திடு மடியுங்கொ ளிந்நகர் மணித்தே
ரெண்கி ழித்திடும் படிசெலுந் தன்மையெய்த் தன்றே
கண்கி ழித்திடு நுதலிதேர் நிலையுற்ற கடனே. (௩௫)

அடரு மாற்றல ரெதிர்ப்படி னுகவத் தன்னார்
குடரு மூளையுஞ் சோரியுங் கொழுவும்வன் னரம்பின்
றொடரு மென்புமற் றுள்ளவுந் துவையலே யாகப்
படருங் கால்வலித் தேர்நிலை யாவயிற் பலவால். (௩௬)

## வீரரிருக்கை.

கண்ணி மைத்திடார் வேலெதிர் கனன் றுமே விடினுங்
கண்ணி முன்வைத்த கால்பின்வை யாக்கழல் வீரர்
கண்ணி வப்புறு தும்பைசூ டுதல்கண மேனுங்
கண்ணி வாகையே சூடலென் றும்மவர் கற்றோள். (௩எ)

ஆசை யெட்டினு நிறூஉம்பிர தாபத்தி னமைந்தார்
மாசை நேர்வது வரினுயிர் பொருளென வையார்
தேசை யார்கழ லார்பகை யெதிர்சினங் கழலா
ரீசை பாலின னிளமுளை யெனத்தகு மியல்பார். (௩அ)

சிலைவ ணக்குமு னெதிர்ப்படு மாற்றலர் திண்டோண்
மலைவ ணக்குவர் வாள்கொடு வீசுமுன் மாற்று
ரலைக டற்புவி யவர்கொள வீசுவ ரனையர்
நிலையு டைத்திற லிற்றென நிகழ்த்துவா ரெவரே. (௩௯)

இனைய வீரர்த மேவலா ளருமிகல் யானை
துனைவ யப்பரி சயந்தனக் கருவிதோற் றுநரு
முனைய வாயுதஞ் செய்நரு மாய்ப்பலர் முற்றி
நினைய மேவிய விருக்கைக ளாவயி னெருங்கும். (௪0)

வருவ செல்வன கரிபரி முழக்கமு மணித்தேர்
தருவ தாகிய முழக்கமும் பகனெடுஞ் சலதி
யொருவ மிக்கெழும் புறநகர் வளஞ்சில வுரைத்தாம்
பொருவ தொன்றிலா விடைநகர் வளஞ்சில புகல்வாம். (௪௧)

இடைநகர். வேறு.

தொகுபொன் மாடமுஞ் சுடர்செய் கூடமுந்
தகுபல் சோலையுந் தடநன் மாலையும்
புகுந ரியாவரும் பொருந்த நோக்குபு
நகுசு வர்க்கமு நரக மென்பரால். (௪௨)

பற்ற வாநளி படருஞ் சோலைவாய்க்
கற்ற மங்கையர் கைதொட் டாட்டத்தோ
மற்ற மாதரா ளூச லாடியாங்
குற்ற மைந்தரை யூச லாட்டுவார். (௪௩)

மாட மேலிவர் மங்கை மார்கைசற்
றோட நீட்டிமே லுற்ற கற்பகப்
பாட வாங்கனி பறிப்ப ரிம்மையே
பீட வாமறு மையும்பெற் றூரரோ. (௪௪)

பலவின் மாடமேற் பளிங்கை நீர்நிறை
தலமெ னுநபச் சுரபி தாவிடு
முலவு தேவுரு வுற்ற போதினு
மலமீ றுதெனின் மயக்கந் தீருமோ. (௪௫)

கொடிய மாடமேற் கூடு வார்திற
நெடிய வானவர் நிரம்ப நோக்கியுட்
படிய வோரமுக் காறு பற்றலா
லடிய தாமக வாக்க நீத்தனர். (௪௬)

முகைசெய் கூந்தலார் முறிசெய் கைகளாற்
றகைசெய் பந்தெடுத் தறைத ரக்கொங்கை
யுகைசெய் தொண்டகி னேக்கு மோரிடர்
பகைசெய் வார்க்குறிற் பார்ப்பு ருரெவர். (சஎ)

தைய லார்முகஞ் சரிகொ லோவெனுக்
கைய தாமதி காளை மைந்தர்கள்
செய்ய மாடமேற் சேர்ப்பக் கண்ணிடு
மைய ளாவலான் மறுவென் ருயதே. (சஅ)

கோல மாதரைக் கூடும் வாஞ்சையுட்
கோல மைந்தர்மேன் மாடங் கூடவைங்
கோலன் றேர்மிசைக் கொண்டு மென்றதக்
கோல ஞய்ப்புகுங் குறுங்க ணூடரோ. (சகூ)

இலக்க மாயபா சவலி டிக்கும்போ
துலக்கை தாக்கலா லுதிர்வ மாங்கனி
நலக்க வொன்றனை நண்ணுங் காலையொன்
றலக்க ணிங்குற வடைத லுண்டரோ. (ருo)

வஞ்சி யங்கலார் மாட மீமிசைக்
கஞ்சி யார்துகில் கமழ வூட்டிய
வஞ்செ ழும்புகை யடைத லாலன்றே
மஞ்சு வான்புகை வண்ண மென்பரால். (ருக)

முல்லை மாதரார் முலைக்குத் தோற்றன்றே
வொல்லை யம்புய முறுக்கு டைக்கிடும்
புல்லு ருதபங் கம்பு ரிந்திடிற்
சொல்லு மீதொன்றே பல்ல துன்னுமே. (ருஉ)

பிணைய ஞர்முலை பிறங்கு கைத்தழீஇ
யணையு மைந்தர்த மார்ப முந்துவ
துணையி லாத்தமிழ் முனிகை தொட்டபோ
திணையி லாவரை யழுந்த லென்னவே. (ருங)

துங்க மைந்தர்தஞ் சிகையிற் றேகைமார்
பங்க யப்பதச் சுவடு பாய்தலா
லங்க நான்மறை யாய்ந்த வேதியர்
தங்கண் மைந்தரெச் சாதி யாருமே. (ருச)

ஆவி வாயினி தாடு மாதரா
ரேவி ளும்விழி யிகுளை மாரெனத்
தூவி யோதிமந் தொடர்ந்து செல்லுவா
ரோவில் பேதைமை யொழிக்க வல்லரோ. (ருரு)

மங்கை மாதரார் வாரி சம்பொருஉஞ்
செங்கை மேவுவ கிள்ளை தேருங்கா
லங்கை யாவடி வந்த லார்தடங்
கொங்கை யுந்தக மேவல் கூடுமே. (ருசு)

நீடு தோள்வலி நிலைஇய மைந்தர்கள்
பாடு மாதவைப் பரிந்து வேட்டொளி
யோடு பேர்மறு கூடு லாவுத
லோடு மிந்திர னறுமு றுப்பனல். (ருஎ)

காவ ணத்திடைக் கதலி யாத்துமென்
பூவ ணத்தொடை புனைதல் செய்தபே
ராவ ணத்தெழில் கேட்ட டைந்தவர்
மாவ ணத்தவா னுலகம் வாஞ்சியார். (ருஅ)

மண்டு தீஞ்சுவை வாய்ந்த சிற்றுணக்
கண்டு நேருருக் கனியு மற்றவுங்
கொண்டு போமெனக் கூறுந் தேமமு
துண்டு ளார்க்கும்வா யூற்றுண் டாக்குமே. (ருகூ)

நயம மைந்தசொன் னங்கை மார்முலை
யியலு மைந்தர்க ளியாவ ராயினும்
புயநெ ருங்குறப் புரியும் வீதிக்கு
நியம மென்றபேர் நீதி யாங்கொலோ. (சூ0)

கடையு றப்படா வளங்க ணிந்திடு
மிடைந கர்ச்சிறப் பென்னு ரைத்தன
மடையும் விண்ணுல கதனை யெள்ளுபு
மிடையு முண்ணகர் வளமும் விள்ளுவாம். (சூக)

அகநகர். வேறு.

அ க ழி.

போழ்ந்தவண் குசைநுனி யனைய புந்தியர்
தாழ்ந்தபல் கலைகளு முணர்ந்த சான்றவர்
வீழ்ந்தநுண் புலமையர் மிளிர்க ருத்தினு
மாழ்ந்தது சூழ்ந்தபே ரகழி யென்பவே. (சூஉ)

எண்ணிய கடலெலா மிந்த வண்ணமாப்
பண்ணிய வெனவிதிக் குணர்த்தும் பான்மைகொண்
டண்ணிய சிவபிரா னமைத்த வாழியா
நண்ணிய பெருந்துறை நகர்க்கி டங்கரோ. (சூரு)

வாரியு ளொளித்தமை நாகம் வண்டமி
ழாரியன் குடிக்குந்தெவ் வறியு மேயென்று
பேரிய லரணமாப் பிறங்கிப் பாம்புரி
சேரிய நினைக்குமேற் செப்ப வின்னுமென். (சூச)

ஒருகடல் கண்டுமேற் றுள்ள வாரியுந்
திருகறச் சேர்த்தறி வாஞ்சை தீர்ந்தனஞ்
சுருதிசொ லிந்நகர் சூழ்கி டங்கெனுங்
கருதருங் கடலினைக் கண்ட பின்னரே. (சுரு)

வெளியுற மணவர விந்த மாதிவீ
களிகரா முள்ளுறக் காணும் பேருடுத்
தெளிநல மகம்புறந் தீய தேற்றமை
யளிநலப் புத்தர்மா றுய மைந்ததே. (சுசு)

மதில்.

மும்மதில் வானவர் முனிய மேயதா
லம்மதி லிறைவனு லழலப் பட்டவென்
றிம்மதின் மற்றவர் விரும்ப வெய்திமற்
றெம்மதி லிதற்கிணை யென்னக் காக்குமே. (சுஎ)

கொடியது கொடியது கோணை நாஞ்சில்சா
னெடியதென் பாரடுக் கன்று நீள்பொறிக்
கடியதா லொருபொருள் கண்ணிற் கண்டன
முடியதொன் றனைவிழி முகந்த தில்லையால். (சுஅ)

உயர்மதி லுயர்மதி லென்று ரைக்குமிப்
பெயர்மதி லிதுமற்றைப் பெரும திற்கெலா
முயர்மதி றுன்விதி யண்டத் துச்சியாம்
பெயரதி னுயர்திறம் பெற்ற தில்லையால் (சுகூ)

பொறியடக் குபுபகைப் புலங்க டந்தகஞ்
செறிதர வுயர்பொருட் சிவமி யாவரு
மறிதர வுயர்தலா லனைய மாமதி
னெறியமை முனிவரர் நிலைமை காட்டுமே. (எ௦)

கதிர்மதி முதலவாக் கனையுங் கோளெலா
மதிர்வற வழங்குதற் காய நொச்சிவாய்
முதிர்பகைக் கஞ்சுபு மூடு றுப்புத
வுதிர்தலி லாத்திறத் துற்ற வென்றுமே. (எக)

பரத்தையர்வீதி.

இராப்பக லெனுதிணை விழைச்சி யற்றலால்
விராய்த்தழு வுநரிவ ரெனுத மெய்மையா
லராப்படக் கடிதடக் கணிகை யந்நலா
ரொராப்பெருஞ் சேரிமற் றும்பர் சேரியே. (எஉ)

அடிநிலங் கூடில வணியல் வாடில
நெடியகண் ணுடில நிற்ப வோவியங்
கடிமனைச் சுவர்ப்புறங் கணிகை யந்நலார்
படிநல நசைஇச்சுரர் படர்ந்த தொக்குமே. (எகூ)

நகைக்குறி நகக்குறி நயந்த ணைத்திடல்
வகைப்பயு னுறுசுவை யமுத மாந்திட
றகைத்திற முறுதுகை தட்ட லாதிய
முகைத்தவோ வியந்தெரி மாண்பின் முற்றுவ. (எச)

பாடலாற் சிலர்பொருள் கருவி பம்பநின்
றூடலாற் சிலர்பொரு ளலர்வி னோதத்தி
னீடலாற் சிலர்பொரு ணேயம் போல்விராய்க்
கூடலாற் சிலர்பொருள் கொள்ளை கொள்வரே. (எரு)

முன்னவர் கலப்பினு மூரி நீர்ப்புவி
மன்னவர் கலப்பினும் வணிகர் கூடினும்
பின்னவர் கலப்பினும் பெட்டின் பாக்குவா
ரென்னவ ருக்குமின் பாக்கு மீசன்போல். (எசு)

முன்னிய வெச்சிலியா வருமு கத்தலால்
வன்னியும் பொதுமட வாரு மொத்தன
ரென்னினு மிருவரு மீயும் வெப்பந்தான்
றுன்னிடி னீங்கிடிற் சுடுதல் வேற்றுமை. (எஎ)

கணிகையர் பொதுநலங் கருத்தி னெள்ளுநர்
தணிவரி தாகிய தரும மெள்ளுவா
ரணிதரு மூருணி யறலை யெள்ளுவர்
பிணிதவிர் முத்தியின் பழமுட் பேணலார். (எஅ)

வெள்ளணி செவ்வணி மேவி மற்றவ
ரொள்ளணி வீதிவா யுலாவு மங்கையர்
தள்ளரு மவர்பெருந் தவத்திற் பூந்தளி
விள்ளரு மங்கையர் விராய தொக்குமே. (எகூ)

கலையழுக் குறுமையாற் சிவிறி கைவிடார்
நிலைதிறத் துடம்பின்வே ரெழாத நீர்மையான்
மலைமலர் வாடுறு வண்ணஞ் சூடலா
லலைகடற் புவியகத் தரம்பை மார்களே. (அ0)

இப்புவி யரம்பைய ரென்ற தென்னெனிற்
றப்பில்பூ சுரரெனு மொழியுந் தப்பதா
மொப்பரும் பரத்தைய ருறையுஞ் சேரியி
னப்பெரு வளந்தெரிந் தளகை தோற்றதே. (அக)

## வேளாளர்வீதி.

களைபொரு நதிகளுட் கங்கை மேலதன்
வுளைபெறு நதிகுலத் துதித்த வேதுவாற்
றளைபுகழ் தூய்மைமுன் னுய சார்ந்தசீர்
வளைவில்வே ளாளர்தந் தெருக்கண் மல்குவ. (அஉ)

தினகரன் முனமிருள் செறிவ தாயினு
முனகரு ணல்லருண் முயங்கு மாயினு
மனகமெய்ச் சுகுணவே ளாண்மை மாக்கட
மினமனை யிடைப்பசி யில்லை யில்லையே. (அ௩)

அருமருந் தனையவே ளாள ரோம்புவர்
வருவிருந் திலரெனில் வாட்டந் தீர்வரோ
கருமுகில் வேண்டிய காலம் பெய்வதை
யொருவுறி னுய்குவ துலக மெங்ஙனம். (அ௪)

மின்னிய புலமையர் மேவி நாடொறு
மன்னிய பொருட்கவி மாலை சூடுவர்
துன்னிய வுற்பலத் தொடையின் வாட்டமுள்
ளுன்னிய திறத்தர்மற் றெதையு வப்பரே. (அ௫)

கொடையொடு முகமனுங் குறிக்கொள் சீலநன்
னடையொடு ஞானமு நக்க வுற்பலத்
தொடையொடு செந்தமிழ்த் தொடையு நாடொறு
முடையவர் தெருவள முரைக்க முற்றுமே. (அ௬)

வைசியர்வீதி.

கணிதமில் வயிரமுங் கமல ராகமு
மணிமணித் தரளமு மவிர்கோ மேதமுந்
தணிவில்வித் துருமமுந் தாம்ப ரம்பலால்
வணிகர்த நெடுந்தெரு வலன விந்ததேம். (அ௭)

எதுபுகூஉ வினவினு மினஞ்சுட் டாமலே
யதுதர வல்லவ ரிம்மி யாயினு
முதுகணக் கிடையொழி யாமு யற்சியர்
கதுவுதல் விடுதலுட் கணித்துச் செய்வரால். (அஅ)

கொள்ளுநாட் கொள்ளலுங் கொண்ட யாவையுந்
தள்ளுநாட் டள்ளலுந் தெரிந்த தன்மைய
ரள்ளுநா ளுவப்பதி னவைதம் பானின்றும்
விள்ளுநா ளுவப்பது மிக்க தாமன்றே. (அகூ)

நிறையுயிர் புணர்தர முன்ன நின்றதாங்
குறையுயி ரொழிதரல் குறித்துக் கற்பவ
ருறைதரு நந்தொழி லொத்த தாமென
மறைதலி லாப்பெரு மகிழ்ச்சி பூப்பரே. (கூ0)

ஒருபுணர்க் கிரண்டுமூன் றுற்ற காலையுங்
கருதுறு தோன்றலி லுவத்தல் கைக்கொள்வா
ரருநிதிக் கிழவனி னுதுந் தாளினற்
றிருவெனு மவர்தெருச் செப்ப முற்றுமோ. (கூக)

### அரசர்வீதி.

மருவல ரோடமர் வலியச் செய்தவர்
திருவுறக் கவர்ந்துவிண் செல்ல வுய்த்துமண்
ணொருசில ரைத்தடுத் தாண்டின் புய்த்திடும்
பெருமனிற் பொலிபவர் தெருப்பி றங்குவ. (௯௨)

மகபதி யமர்த்தாண் மற்றிம் மன்னர்பாற்
றகவடைக் கலம்புக றகவெ ணச்சில
நகமடைந் தெனப்பொலிந் துயர்நன் மாளிகை
யிகவரு மன்னர்த மியல்பென் சொல்லுகோ. (௯௩)

வண்டுதொட் டிடுமுனம் வண்டு தொட்டிடா
மண்டுதார் தரியலர் மார்பிற் சூட்டவான்
கண்டுநேர் மொழியவர் கண்டு கொள்வரே
லண்டமேற் றவர்திற லறையப் போவதோ. (௯௪)

அரியுகைப் பவளைத்த மம்பு யங்கொடு
கரியுகைத் திடுதலுங் கலினம் பூண்டவாம்
பரியுகைத் திடுதலு முருளை பாய்பரிக்
கிரியுகைத் திடுதலும் வல்லர் கேடிலார். (௯௫)

ஆடலும் பாடலு மனுப வித்திரா
வூடலுங் கூடலு மொருங்கு துய்த்துநைந்
தோடலும் வாடலு முறுப்ப கைத்திற
நாடலு முளார்திற நவில முற்றுமோ. (௯௬)

### மறையவர்வீதி.

மிகுமறை யங்கமோ டுணர்ந்த மேன்மையாற்
றகுமறைக் கொடியொரு கையிற் றாங்கினார்
நகுமறைப் பொருளுற நயந்த சிந்தையார்
தொகுமறை யவர்தெருச் சொல்ல நின்றதே. (௯௭)

தவமறை யவர்மகச் சாலை வாணெரீஇக்
குவலயம் பயிலுமா கூட்டி யூட்டலா
லிவர்தரு பெரும்புக ழிந்தி ராதிய
ரவரையும் பூசுர ராக்கி னாரரோ. (௯௮)

முதல்வழி சார்பெனு மூன்று நூல்களு
மிதமுறத் தங்கணெஞ் சிருக்கு மென்பதைச்
சுதமின்முந் நூல்களுந் தோயப் பூணலாற்
கதமறக் காட்டுவர் கரிசின் முன்னவர். (௯௯)

விற்படை வாட்படை யாதி வேறுள
கொற்படை சுமப்பவ ரியாருங் கும்பிடப்
பொற்படை மந்திர மென்று போற்றிடுஞ்
சொற்படை சுமந்தனர் துன்ன லாரற. (௧௦௦)

அதிதியர் பசித்தழ லவித்துக் கற்பெனும்
பொதிதழல் வளர்த்திடும் பொன்னங் கொம்பனார்
மதிநுதற் பார்ப்பன மடந்தை மார்செறி
துதிமறை யவர்தெருச் சொல்லத் தீருமே. (௧0௧)

### ஆதிசைவர் மாளிகைகள்.

மறையுட னாகம முணர்ந்த மாட்சியர்
பொறையொடான் மார்த்தப ரார்த்தம் போற்றுவா
ரறைபெரும் புகழ்மிகு மாதி சைவர்வாழ்
நிறைவள மாளிகை நிலாமொர் சாரெலாம். (௧0௨)

### வைதிகசந்நிகாசிகள் மடங்கள்.

மறைமுடிப் பொருளுணர்ந் தவர்ம யக்கமோ
ரிறையுமில் லவர்பகை யெறிம ழுப்பொரூஉங்
குறைவிறண் டியாத்தவெண் கோவ ணத்தின
ருறைதிரு மடங்களு முள்ளவாங் கோர்சார். (௧0௩)

### சைவாசாரியர்களிருக்கை.

மேவரும் பக்குவம் விரும்பி நோக்குபு
மூவகைத் தீக்கையு முறையி னாற்றிமுன்
னேவருஞ் சரியைமுன் னியங்க வுய்த்துயர்
பாவனஞ் செய்பவ ரிருக்கை யும்பல. (௧0௪)

### சைவசந்நியாசிகள் மடங்கள்.

பதிபசு பாசத்தின் பகுப்பு ணர்ந்தற
முதிர்தர வுருவமுன் மூன்று முற்றரு
ளதிருறக் கண்டுமே லின்ப மார்சைவ
மதிமுனி வரருறை மடங்க ளும்பல. (௧0௫)

### கல்விச்சாலையும் பிறவும்.

இலக்கண விலக்கிய மெலாமு ணர்த்துவார்
கலக்கமில் கழகமுங் கவிமுன் னால்வரு
முலக்கரும் வாதஞ்செய் துறையி டங்களும்
விலக்கரு மற்றவு மேய வோர்புறம். (௧0௬)

### அன்னசத்திரம்.

முரிவரு முல்லைவெண் முகைய மூரலுந்
தெரிசெழும் பொன்னிறப் பருப்புந் தீஞ்சுவை
யிரிதராக் கருனையும் பாகு மேனவும்
பரிவொடு மூட்டுசத் திரமும் பல்லவே. (௧0௭)

கங்கையோர் பத்துஞ் சென்னி யொருசடைக் கரக்கச் செய்தாய்
மங்கையோர் பங்கா விந்த மாப்பெருந் தலத்தி யார்க்கு
மங்கையா மலக மென்ன வருள்செய்மா நதியொன் றின்றே
சங்கையி லாது மேவத் தந்தரு டாரா யென்னில். (கஉ)

அடியனேன் கண்ணீ ரேபல் லாறுகப் பெருகா நிற்கு
முடிவிலந் நீரு மோவிச் சடையெலா முகக்கு மாறு
நெடியதோர் வேலையுண்டா மதுநிகழ் வதற்கு முன்னே
கொடியனேன் கவலை தீரக் கொடுத்தியோ ராற்றை யென்றான். (கரு)

என்றலு மான்ம நாத ரிரங்கியா காய வாக்கா
னன்றருள் செய்வார் மன்னு நயக்தொரு சைய மெய்தி
நின்றருந் தவஞ்செய் வாயே னினைத்தவா முடித்து மென்று
ரன்றது கேட்ட வேந்த னடங்கரு மகிழ்ச்சி யெய்தி. (கச)

சையமால் வரையை யெய்தித் தவாவரு ளான்ம நாதர்
செய்யதா மரைத்தா ளுள்ளஞ் செறிதரச் செறித்து நின்று
மெய்யவா மன்ன ரோடு மெய்யவா வாது வாட்டி
வெய்யவா தவமுன் யாவு மேவுறத் தவம்பு ரிந்தான். (கரு)

அருந்தவஞ் செயுஞ்சு வேத கேதுமன் னன்பு நோக்கிக்
குருந்தடி யமரு மையர் கோலமா மறையோ ராகிப்
பொருந்தமற் றவன்முன் செல்லப் பொருக்கெனக் கண்டு தாழ்ந்தான்
வருந்தலை பன்னு ளுஞ்செய் மாதவ மகிழ்ந்தே மென்றார். (கசு)

என்றவ னெதிரோர் தீர்த்த மினிதினுண் டாக்கி யீது
நன்றிரு பாக மாகிக் காவிரி நாப்ப ணுகச்
சென்றிரு பாலு மோடித் தில்லையின் வடக்கோர் கூறாய்
மன்றநா மகிழுந் தெய்வப் பெருந்துறை வடக்கோர் கூறாய். (கள)

ஓடுபு பரவை சாரு முறைத்தவிக் குடிஞை நாம
நாடுநின் பெயர்முற் சொல்லா ஞனிலம் புகல்வ தாக
வாடுநர் நம்பே ரின்பத் தாடுந ராகக் காட்சி
கூடுநர் நமது காட்சி கூடுந ராக வின்னும். (கஅ)

இருபகுப் பாயி யங்கு மிந்நதி யிரண்டு பாலும்
பொருவரு வளங்க ளெல்லாம் பூப்பன வாக மூழ்கி
யொருவருஞ் சிராத்தஞ் செய்வோ ருலப்பிலு ளளற்ற மூந்தி
வெருவுறும் பிதிரர் தம்மைக் கரையேற்றி விடுவா ராக. (கக)

ஆயவண் கயாசி ராத்த மாயிர மேனு நின்பேர்
மேயநன் னதிச்சிராத்த மொன்றனை வெல்லா வாகத்
தூயமற் றிதனைக் கண்டார் தொட்டாருட் கொண்டா ரியாரும்
பாயநம் முலகஞ் சேரும் புண்ணியப் பால ராக. (உ0)

உலகுப கார மாக வொருகுருந் தடியின் மேவு
மலகினம் மருள்கு றித்தே யலகிஞண் முயன்று நோற்று
வலனுடை யிவ்வ ரங்கண் மாட்சியிற் பெற்ற நீயு
மிலகுநம் மடிக்க லப்பி னெய்தியின் புறுவா யாக. (உக)

என்றுபல் வரமு நல்கி மறைந்தன ரெங்க ளைய
ரன்றெதி ரமைந்த தீர்த்த மலையெறிந் திருபா லாகி
வென்றுமேம் படுகோ வேரிக் கிருபாலும் விராவி யோடிச்
சென்றுவான் பரவை தோய்ந்து திருந்துமா நதியா யிற்றே. (உஉ)

அதிசயம் பயப்பப் பொன்னித் தென்றிசை யவாவிச் செல்லு
நதிவழி வந்து மன்ன னகுபெருந் துறைக்கு நீசி
மதியமை துறையின் மூழ்கி வயங்குவெண் ணீறு பூசிப்
பதியெனு மான்ம நாதற் பணிந்துள மூவந்தா னன்றே. (உரு)

அற்றைநா ளாதி யாக வமரரே முதல்யா வோருங்
கற்றைவார் சடையா ரன்று கட்டளை யிட்ட வாய்மைப்
பற்றையா தரித்து மன்னன் பெரும்புக ழையும்பா ராட்டி
விற்றையா றிற்கு நாமம் வெள்ளாறென் றிசைத்தா ரன்றே. (உச)

வானந்த மலைவி ராவ மாப்பெருக் கெடுத்து நேருங்
கானந்த முறப்பெ யர்த்துக் கடுத்துமேல் வரும்வெள் ளாற்றை
யீனந்தம் பானீப் போர்தோய்ந் தானந்த மெய்த லாலே
யானந்த வெள்ளா றென்று மறைகுவ ரறிந்து ளோரே. (உரு)

மணிபல கொழித்து வாரி வரையகில் சந்து ருட்டிக்
கணிதமின் மலர்ப ரப்பிக் கடுகுபு வருவெள் ளாற்றி
னணிகெழு மஞ்ச னங்கொண் டான்மநா யகனை யாட்டுந்
துணிவினர் பெறுமாப் பேற்றை யாமேயோ சொல்ல வல்லேம். (உசு)

பொருவருஞ் சுவேத கேது மன்னவன் புரிந்த நோன்பால்
வருபெருந் திரைவெள் ளாற்றின் மாட்சியை யெடுத்துச் சொற்று
மிருவரு முணரா வைய ரினிதம ரிடமாய்ப் பாவர்
மருவரும் பெருந்து றைச்சீர் விசேடமும் வகுப்பா மன்றே. (உஎ)

வெள்ளாற்றுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருஉக.

# பெருந்துறைவிசேடப்படலம்.

பாய மாமலர்க் கற்பக நீழல்வாழ் பவன்பதம் விழையார்நன்
காய தாமரை மலர்மிசை யிருப்பவ னரும்பதம் விழையாரின்
பேய நாடொறும் பாம்பணைக் கிடப்பவ னிரும்பதம் விழையார்வான்
றேய வாவிசூழ் வாதவூர்த் தம்பிரான் றுணைப்பதம் விழைந்தாரே. (௧)

அநாதி மூத்தனு மான்மநா யகப்பிரா னைந்தொழி லினிதாற்ற
வநாதி யேசெழும் பிரணவ பீடமா வவாயமர் திறத்தானு
மனாதி மேற்பரை குண்டலி வடிவமா மன்னிய திறத்தானு
மனாதி யொப்பவ நாதிமூர்த் தத்தல மறைபெருந் துறையென்னும். (௨)

மேய மேன்மைசால் பிரணவ நாதநல் விந்துவக் கரமற்று
மாய மாமறை யாகம மாதிய வனைத்துநூற் பொருளெல்லாந்
தூய யோகநற் பீடமாக் கொடுபரை தோன்றமே வுதலாலே
பாய சீர்த்தியத் தலமொன்றே யுலகெலாம் பரித்துமே விடுமம்மா. (௩)

விரிய வெப்புவ னங்களும் வாழ்பவர் விண்ணவர் விண்ணுளி
யரிய தாமரை மேலவன் மாலவ னளப்பிலா முனிவோர்க
டெரிய வந்துவந் திறைஞ்சுபு வினைபொரு டிருத்தகக் கொளக்கொண்ட
பெரிய தாயபண் டாரமொத் ததுதிருப் பெருந்துறைத் தலமம்மா. (௪)

திருவ மல்கிய திறத்தினாற் றிருமக டிருவநல் குறுகல்வி
மருவ மல்கிய திறத்தினாற் கலைமகண் மாண்புசான் மெய்ஞ்ஞான
வுருவ மல்கிய திறத்தினாற் பராபரை யொத்ததுற் றவர்க்கின்ப
மிருவ மல்கிய கருணைசால் பெருந்துறை யெனுந்திருத் தலமம்மா. (௫)

உயிர கத்தமர்ந் தான்மநா யகரெனு மொருபெயர் பெற்றாராங்
கயிர்த பப்பிர சன்னமா யமர்தலி னனைத்துயிர் களும்போலுஞ்
செயிர றுத்தடைந் தார்க்கன்பு செறித்தலாற் றிருவாத வூரண்ணல்
கயிர வத்திரு வாய்மலர் வார்த்தையுங் கடுக்குமத் தலமம்மா. (௬)

சரியை வேண்டினர்க் கதன்பய னல்கலாற் றவிர்தரா தினிதாற்றுங்
கிரியை வேண்டினர்க் கதன்பய னல்கலாற் கிளர்பெருஞ் சிவயோகம்
தெரிய வேண்டினர்க் கதன்பய னல்கலாற் றிருந்திய சிவஞானம்
புரிய வேண்டினர்க் கதன்பய னல்கலா னான்மநா யகர்போலும். (௭)

வேறு.

வரவு ருத்திர நாயகர் மன்னிய கயிலை
பரவு சீர்ப்பெருந் துவாதசாந் தத்தலம் பண்பின்
விரவு மான்மநா யகரம ரித்தலம் விளம்பிற்
கரவு தீர்தரு சோடசாந் தம்மெனக் கரைவார். (௮)

இன்னு மப்பெருங் கயிலையை யுலகமென் றிசைக்கு
மன்னு மாபுரு டனுக்குற விசுத்தியா மதித்துப்
புன்னு நான்மறை திருப்பெருந் துறையெனும் பதிதா
னுன்னு மாதுரி யாதீத மாலென வுரைக்கும். (௯)

சகள ரூபமாங் கயிலைமுன் னெவ்வகைத் தலத்து
மகள ரூபமாந் திருப்பெருந் துறைப்பதி யதிக
நிகள மாகிய பந்தநீத் தின்பமா நிறைவொப்
புகள மாவறப் புணர்த்திடு திறத்தினாற் பொலியும். (க0)

இந்த மாத்தலந் தனக்குயர் வொப்பதொன் றில்லை
யந்த மாதியு முளதென வறைவது மில்லை
யெந்த நாளுந்த னியல்பினிற் றவிர்தலு மில்லை
யுந்த மேவினோ ருட்பிறப் புறுநரு மில்லை. (கக)

கங்கை யாறுசூழ் காசியர் தியதலங் கலப்புற்
றங்கை யாமல கம்பொர வாற்றுபுண் ணியங்கள்
சங்கை தீருமா மேருவே யெனினுமித் தலத்து
மங்கை பாகர்முன் புரியணுத் துணையுமா னுதால். (கஉ)

ஒருபெ ருந்துறைத் திருவிழாச் சேவிக்க வுறுவார்
மருவு தற்கிடங் கொடுத்தவ ருணப்பதம் வழங்குந்
திருவ மிக்கவர் திருமடஞ் சமைத்தவர் தெய்வப்
பொருவில் சீர்த்தியு மவர்பெறும் பேறுமியார் புகல்வார். (கங)

நந்த னப்பணி யியற்றுநர் நறுமலர் பறித்துப்
பந்த முற்றிடத் தொடுத்தணி பவர்தளிப் பரவ
முந்த நெய்விளக் கிடுபவர் பிறபணி முடிப்போ
ரெந்த வானருங் கீழ்ப்பட மேற்படு மியல்பார். (கச)

அன்ன தானநன் காற்றினும் பிறிதறஞ் செயினு
மன்ன வற்பமு மேருவாய்ப் பெருத்திடு மரபாற்
சொன்ன வத்தலத் தடைந்தன ராற்றிடத் துணிவா
ரென்ன வேறுபஃ றலத்துமெய் தாரறி யியல்பார். (கரு)

வேறு.

நலமலி யித்த லத்தி னுமங்கே ளனுதி மூர்த்தத்
தலமருள் வடிவ மாய பெருந்துறை சான்றோ ரியாருஞ்
சொலவொளி மயமாய் மேய சிவபுரந் தோன்றென் ஞான்றுங்
கிலமில தர்ய ஞான கேத்திர மின்னுங் கேளாய். (கசு)

மன்னிய புகழ்க்கு ருந்த வனம்யோக வனமென் ஞான்று
மின்னிய புகழான் மிக்க தென்கயி லாய மேன்மை
பன்னிய வொருநால் வேத புரம்பவித் திரமா ணிக்கந்
துன்னிய யோக பீடப் பதியின்னுஞ் சொல்வ துண்டால். (கஎ)

பராசத்தி புரமெய்ஞ் ஞானந் தவமெனப் பகரி ரண்டும்
விராவுற்று நிறைந்த தேசு வனம்விளங் காதி கைலை
யொராவற்பி னொளிர்ும் மூர்த்தி புரமுப தேச மூதா
ரிராவற்ற நாம மின்னும் பலவவை யியம்பப் போமோ. (கஅ)

பெயரிவைக் கேதுப் பின்பு பேசலாற் றெரிய லாகு
முயர்தலப் பெருமை சொற்று மொருதரஞ் சொலினுஞ் சன்மத்
துயரறுத் தின்ப வாரி தோய்த்திடுங் கருணை மூர்த்தி
மயலறு பெயருஞ் சற்றே வகுத்துரை யாடக் கேண்மோ. (கக)

பெருந்துறைவிசேடப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருசஅ.

---

# மூர்த்திநாமவிசேடமுரைத்தபடலம்.

---

மறைபுகல் சரியை யாதி வயங்குநாற் பாதம் பற்றி
முறைமையி னுழுகல் வெஃகார் முதுவள வாத வூரெம்
மிறையிரு பாதம் பற்றி யியங்குதல் வெஃகி னோரோர்
குறையில ரடுத்துளார்தங் குறைவினுய் முடிப்ப ரன்றே. (க)

நலமலி யநாதி மூர்த்தி நயத்தலா லநாதி மூர்த்தத்
தலமென்ப ரநாதி மூர்த்தத் தலேசனென் றொருநா மம்பெற்
றிலகுவ னிறைவன் முன்ன மெதிர்வழக் காடி வெட்டு
நிலவடு வகத்தி னின்று நீரெழு நீர்மை தன்னல். (உ)

பெருந்துறை யென்றோர் நாமம் பெற்றது சிவபி ரானும்
பெருந்துறை யீச னென்னப் பெரியவ ரெடுத்துச் சொல்வர்
திருந்துற நன்மை நல்கிச் சிவபுர மாய தாங்குத்
திருந்துற வமர்த லாலே சிவபுரே சப்பேர் பெற்றான். (ஙு)

ஞானநல் குதலான் ஞான கேத்திர மெனும்பேர் நண்ணிற்
றீனமி றலமு ஞான கேத்திரே சப்பேர் பெற்றான்
வானவர் பிரானுங் குந்த மரீஇக்குருந் தவன மாயிற்
றானநா யகன்கு ருந்த வனேசனென் றறையப் பெற்றான். (ச)

பரைசிவ யோகஞ் செய்தல் பற்றியோ கவன மென்ன
வுரைசெய்வ ரிறைவன் றானும் யோகவ னேச னானு
னிரைவட கைலை நோக்கித் தென்கயி லாய மென்பார்
கரையிலாப் பெருமா னுந்தென் கயிலாய நாத னானன். (ரு)

பிரமனல் வேத மேற்கப் பேசுத லானல் வேத
புரமிறை யவனல் வேத புரேசனென் ருெருபேர் பெற்ருன்
வரபவித் திரமா யந்த மணிப்பெயர் பூண்ட தானத்
தரன்பவித் திரமா ணிக்க வாசனென் றறையப் பெற்ருன். (௬)

துதிபுரி யோக பீடந் தன்னலால் யோக பீடப்
பதியரன் யோக பீடப் பதியவ னெனும்பேர் பெற்ருன்
மதிபறை தவஞ்செ யாற்ருற் பராசத்தி புரமாய் மன்னு
நிதிநிகர் பிரானு மந்தப் புரவாச னெனநி கழ்ந்தான். (எ)

வனமறை யொளியாற் றேசு வனமெனு மொருபேர் பெற்ற
தனகநா யகனுந் தேசு வனேசனென் றறையப் பெற்ருன்
மனமுரு நிட்க ளஞ்சார் வலத்தாதி கைலை யென்பர்
பனவர்நா யகனு மந்தக் கைலையம் பரம ஞனன். (அ)

அரன்முதன் மூவர் போற்ற லாற்றிரி மூர்த்தி நாமப்
புரமிறை யவன்மும் மூர்த்தி புரவாச னெனும்பேர் பெற்ருன்
வரவுப தேசஞ் செய்யும் வலத்துப தேச மூதூர்
கரவிலா னுபதே சப்பேர் நகரகா வலப்பேர் பெற்ருன். (கூ)

எரிபுரை சடையி ஞரோன் றிரிந்தமுந் நூற்றி ஞரோ
டுரிமையி னளாவி முந்நூற் ருெருவரென் ருெருபேர் பெற்ருர்
தெரிதரு சதாசி வாதி யைவருந் தியானஞ் செய்து
பரிவொடு துதிக்கு நீராற் பரமசு வாமி யானர். (௧௦)

சகமெலாம் வணங்கக் கண்டு தக்கவா றுபதே சித்துச்
சகதுரு வெனும்பேர் பெற்ருர் விப்பிரர் தமக்கி ரங்கி
நகவழக் குரைத்து வென்று நாயகத் தன்மை மேவி
நகவில்கைக் கொண்ட வையர் விப்பிர நாத ரானர். (௧௧)

அருமறை யவரா யத்தி யயனஞ்செய் வித்த லாலே
யொருவருஞ் சத்த நாத ரூபாத்தியா யருமா னர்மேல்
வருதிறல் வழுதி முன்ன வாம்பரி யுகைக்கு மாண்பாற்
சுருதிசொ லுண்மை யாரச் சுவநாத ரெனும்பேர் பெற்ருர். (௧௨)

அயன்முத லொருமூ வர்க்கு மருளுப தேசஞ் செய்த
செயன்மரு வலின்மும் மூர்த்தி தேசிக ரெனும்பேர் பெற்ருர்
பயனமை யான்ம நாதர் நாமங்கள் பகரி னின்னும்
வியனுள வாகுங் கண்டு விளம்பிட வல்லா ரியாரே. (௧௩)

இத்திருப் பெயரு ளொன்றை மறவாம லியம்பு வோரு
முத்தம மருவ மைந்தர்க் கிட்டுற வழைக்கின் ருேருஞ்
சத்தறி வின்ப ரூபத் தனிமுத லொடுகே லக்கு
முத்தரே யாவ ரின்னு மொழியவும் வேண்டுங் கொல்லோ. (௧௪)

அன்னிய மில்லா வான்ம நாயக ரருணு மங்கண்
முன்னிய வெடுத்துச் சொற்ற மூவுல குய்யு மாறு
மன்னிய மலையான் மங்கை வந்தள வளாவு மேன்மை
துன்னிய யோகபீடச் சிறப்பினைச் சொல்ல லுற்றும். (௧௫)

மூர்த்திநாமவிசேடமுரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௬௯.

---

# யோகபீடச்சிறப்புரைத்தபடலம்.

---

ஞாலமிசைப் பயிலுவன சற்றேனு முணரா து நகுசு வேதக்
கோலவுருக் கொண்டவனி முழுதிடந்து பாதலத்துக் குறுகி யாங்குஞ்
சாலமுயன் றனமந்தோ வெனநெடுமா றளர்வெய்தத் தரணி மேலச்
சீலமல ரடிபயிலத் தெரிவாத வூரரடி சிந்தித் துய்வாம் (௧)

தோற்றுமதி யுங்கலையு மலருநறு மணமுமொன்றாய்த் தோன்று மாபோற்
றேற்றுதிரு வருளான்ம நாதரியற் குணமாகிச் செல்வ மாகிச்
சாற்றிலய போகவதி காரமெலாஞ் செய்யுமொரு சத்தி யாகிப்
போற்றுமறை யாகமபு ராணவிதி காசமுதற் பொருளு லாகி. (௨)

தரைமுதலா மைம்பூத வடிவாகி யவற்றுறுதத் துவங்க ளாகி
யுரைசெயுஞ்செல் காலநிகழ் காலமெதிர் காலமெனு மொருமூன் றாகி
விரையவரு பரிதிமுத லொளியாகித் திசையாய்க்கீழ் மேலு மாகி
வரைவில்பல்லா யிரகோடி யண்டமா யவையீன்ற மாதா வாகி. (௩)

எள்ளுக்கு ணெய்யிருக்கு மியல்பேபோ லெங்குநிறைந் திருந்து போகங்
கொள்ளுமுயிர்க் குறிப்பினைத்து முணர்ந்துசுவர்க் காதிபலன் கொடுத்துப் பின்பு
மெள்ளமெள்ள வபுத்திபுத்தி பொதுமூன்றிற் சிவதரும மிகுவித் துண்மை
தெள்ளுசிவ சரியைமுதற் புண்ணியத்தா லினைத்துயிருஞ் சிவத்திற் சேர்த்து. (௪)

தரைபுகழ்கா ரியரூப சத்திவடி வாயெல்லாத் தலத்து மேவு
முரைசிறந்த பெருமானுக் கிடப்புறமும் வலப்புறமு முற்று மேவிப்
புரையிலுயிர்க் கருள்செய்வா னேரைம்பான் பீடத்துப் பொலிவா ளாகி
வரையவற்று ளற்பத்தொன் பான்பீடங் காரியமா வயங்கக் கொண்டு. (௫)

தவமலியும் பெருந்துறையிற் காரணசத் தியின்வடிவந் தானே யாகி
யுவமையிலாத் துரியபதத் தொளியேகா ரணயோக பீட மாக
நவமொடதிற் சிவயோக நாயகியென் றொருகருணை நாமத் தோடுஞ்
சிவபரா சத்தியென வீற்றிருப்ப ளப்பீடச் சிறப்புங் கேண்மோ. (௬)

ஓங்கார மெழுகோடி மந்திரத்தின் வடிவினையு முட்கொண் டென்று
நீங்காத வடிப்பீட மாயிருப்ப வதன்மேலா னிலவு பீடம்
பாங்கான நால்வேதா கமமங்க முதாலாம்பல் கலைக ளெல்லாந்
தாங்கோசை கொண்டமுப்பத் தெண்கலையா மவற்றின்பேர் சாற்றக் கேண்மோ.()

நிவர்த்திபிர திட்டைவித்தை சாந்திசாந் தியாதீத நிலைமை வாய்ந்த
வுவப்புறுநல் லபரவிந்து கலையைந்தா மொளிரபர நாதந் தன்னுட்
டுவட்சிவள ரிந்திகைதீ விகையுரோ சிகையினொடு துலங்கி யேயுற்
பவித்துயர்மோ சிகைவளரு மூர்த்துவகா மினிகலைகள் பகரு மைந்தாம். (௮)

தலையமைசு சூக்குமைசூக் குமையமிர்தை மிருதைவியா பினிதா மாய
கலைகள்பர விந்துகலை யாகவுரை பரநாத கலையு மைந்தா
நிலைவியா பினிவியோ மரூபையனந் தையனா தைநி கழ்த்து
முலைவிலநா சிருதையென வொளிர்நாத விந்திரண்டு மொருநாற் கூற்றில். (௯)

மதியிருபா னொடுசூக்குமை பைசந்தி மத்திமைவை கரியஞ் சோதி
யதிவாமை சேட்டைரவுத் திரிசயைநல் விசயையப ராசி தையோர்
பதிவடிவப் பிராமிமுத லெழுமாத ராம்பதினெண் கலைக ளோடுந்
திதிமுப்பத் தெண்கலையும் பொற்பதுமா சனமாகத் திகழ வாங்கு. (௧௦)

சீரொன்று மினியநாற் பத்துமுக்கோ ணத்தமருஞ் செல்வி யாகிப்
பேரின்ப முதவுபிர மக்கிழத்தி யாயிருப்பள் பிறைசேர் சென்னிக்
காரொன்று கறைமிடற்ற ரெவ்வுருக்கொள் ளினுமவர்கா தலியாய் வாசத்
தாரொன்று குழலுமையாண் முதலான சத்திகளாய்த் தயங்கி யென்றும். (௧௧)

சிவன்புரியா டலுக்கேற்குந் திருக்கோலங் கொண்டுலகந் தெரிசித் துய்ய
வுவந்துவிளை யாடலினி தாற்றுவளிச் சிவயோக வுமையா டானே
யவம்புரியுந் தக்கன்மக ளெனறவிர்க்க வரைக்குமக ளாகி யந்த
நிவந்தவரை நின்றுபெருந் துறையடைந்து தவம்புரிந்த நீர்மை சொல்வாம். (௧௨)

வேறு.

பெருவிதி பயந்த சிறுவிதி யென்பான் பிறங்குறச் செய்தமா தவத்தி
னிருமையி னண்ட பகிரண்ட மனைத்து மீன்றதா யேயொரு மகளாய்
மருவிநன் கமர்நாட் பரம்பரன் மணந்து வண்கயி லாயத்தை யடையத்
திருகுசா லனைய சிறுவிதி கொடிய தீயவா ணவமலச் செருக்கால். (௧௩)

மருகரு ளொருவ னாகவெவ் வுலகும் வழுத்துமா தேவனை நினைந்தே
பெருகரு ணந்தி யநுஞையும் வேண்டான் பிறங்குவான் கயிலையின் மேலா
லொருகருங் கண்ட னுமையொடு மமரு மோலக்க முற்றன னங்குத்
திருகரு நமைக்கண் டெழுந்திலா னிந்தச் சிவனெனச் சினந்தனன் மீண்டு. (௧௪)

ஒருமக மியற்றித் தாமத குணத்த னொருவனை விலக்கிமற் றுள்ளார்
சருநனி நுகரக் கொடுப்பனென் றெழுந்து சாலையொன் றியற்றின னங்குப்
பொருதழல் வளர்க்க விமலமா தேவன் பொன்னடி சென்னியிற் சேர்த்துத்
திருவிலி பாற்போய்த் திருத்துவ னென்று சேர்ந்தன ளவன்மகச் சாலை. (௧௫)

கனிமனத் தமர ரெண்ணினுண் முயன்றுங் கனவினுங் காணரு முதல்வி
தனியொரு தன்பா லெளிவரல் கண்டுந் தானவ மதித்தன னிருந்தான்
முனிவொருங் கடைந்து புரிமகங் கெடுமோ மொழிந்துயோ கத்தழல் புகுந்து
பனிவரை மகவாய்ப் படர்ந்தன ளதுசெய் பண்டைநற் றவம்பழு தாமோ. (கசு)

வரையிறை மனைவி மேனைபா ராட்டி வளர்த்திட வுயிரெலாம் வளர்ப்பாள்
புரையற வளர்ந்தம் மனைகழங் காதி புரிகுழன் மகளிரோ டாடி
விரைமலர் குற்றுச் சிற்சிறுள் கழிய விமலனை மணப்பது கருதித்
திரையமு தனையா டவஞ்செயல் குறித்தா டிவவியாழ் நாரத னடைந்தான். (கஎ)

கனிமனத் தடைந்த மகதியாழ் முனிவன் கௌரிதன் மூண்மல ரிறைஞ்சிப்
பனிமலர்க் குழலா யுலகெலாம் பயந்த பாவைகே டிருவுளத் தமைத்த
முனிவருங் கரும மியாதென வினவ மொய்குழல் வெண்ணிற முனிவா
தனிமுத லடைந்து மணஞ்செயற் காய தவம்புரிந் திடுதிறங் குறித்தேன். (கஅ)

அதுபுரி வதற்கா மிடமெது வாமென் றாய்ந்திருந் தனனெலா முணர்ந்த
முதுபுகழ் முனிவா முன்னுபு நீயே மொழியென மறுவலும் வணங்கிச்
சதுமுகன் முதலா முயிரெலா மீன்ற தையலிற் குணர்த்துவ னியானே
கதுமென வினைய திறத்தினுற் புகல்வேன் கருத்துற விருத்தெனப் புகல்வான். (ககூ)

குளிர்புனற் பொருனைப் பாண்டிநன் னாட்டிற் குருந்துறை பெருந்துறை யென்றோ
ரொளிர்பெருந் தலமுண் டத்தலப் பெருமை யுணர்த்துத வியாவர்க்கு மொல்லா
நளிர்மலர் மிசையோ னாதிமூ வருக்கு நயந்தருள் புரிந்ததா னறுமாந்
தளிரியன் மேனி யன்னையத் தலமே தவஞ்செயத் தகுதல மென்றான். (உ0)

எனமுனி மொழியக் கேட்டமாத் திரத்தே யெம்பிராட் டிக்கழன் மெழுகின்
மனநனி யுருகக் கண்கணீர் வார மதிப்பரு முவகைமீக் கூர
வனவர தமும்பாண் டியவள நன்னா டாற்றுமா தவப்பய னடையக்
கனகமா மதில்சூழ் பெருந்துறை யடையுங் கருத்துறக் கொண்டன ளன்றே. (உக)

தந்தையா யியையும் படிமொழிந் தெழுந்து தடவிமா னத்தின்மேற் கொண்டு
சிந்தைகூ ரளவில் பரிசனஞ் சூழத் தெய்வதுந் துமிபல வியம்ப
வந்தையின் முனிவ ரரமுழக் கெடுப்ப வமரர்கள் பூமழை பொழிய
நிந்தையி றெய்வப் பெருந்துறை யடைந்தா ணினைதரா ரிருதயத் தடையாள். (உஉ)

மருவிய செம்பொன் விமானநின் றிழிந்து மலர்க்கரஞ் சென்னிமேற் குவித்துத்
திருவிய றளியுட் புகுந்தழ னமைத் தீர்த்தநன் காடிநீ றணிந்து
குருவிய னயன மணித்தொடை பூண்டு கோதிலேந் தெழுத்துளங் குறித்தே
பொருவிய லாத வாதவப் பிரியப் புகர்முகக் களிற்றினைக் கண்டு. (உங)

தளிவலஞ் சூழ்ந்து தம்பிரான் வடிவந் தானெனுங் குருந்தினை யருச்சித்
தொளிவள ரான்ம நாயகர் திருமு னுற்றன்பு மிகப்பணிந் தெழுந்து
களிகொள மலர்க்கை தலைமிசைக் குவித்துக் காரண நீதவான் பொருளே
தெளியநா னின்னை மணப்பது வேட்டேன் றிருவருள் புரியென நிற்ப. (உச)

மறைமுதற் பொருளுள் ளிரங்கியா காய வாணியா லருள்செயு மணங்கே
கறையறு மணியு மதனிடத் தொளியுங் கலந்தென நீயுமோர் நாமு
முறைகுவ மெனினு நீபுரி தவங்கண் டுனைமணந் திடுவதற் குள்ள
நிறைதரு விருப்பங் கொடுநினை வாலே யாம்படி நினைத்தன மன்றே. (உரு)

நினைத்தவா றுகி யித்தலத் தடைந்தாய் நிட்களஞ் சகளநிட் களத்தோ
டனைத்தவாஞ் சகள மெனுமொரு மூன்று ளரும்பெறல் யோகநா யகியே
முனைத்தநிட் களமாஞ் சகளநீ யிரண்டு முயங்கிய தியோகபீ டங்கா
ணனைத்ததா மனைய பீடமே லமர்ந்து நவின்றநிட் களத்தொடுங் கலந்து. (உசு)

மாதவம் புரிமோ புரியுநீ யுணரும் வண்ணநாங் காட்சிதந் தருளித்
தீதற நினைந்த விதமுடித் திடுவாஞ் சேறியென் றருள்செயக் கேட்டுக்
காதலங் கடலு ளழுந்திமே லெழுவாள் கடுப்பத்தாழ்ந் தனள்விரைந் தெழுந்தா
ளோதலங் கமையா யோகபீ டத்தை யுற்றமர்ந் தருந்தவம் புரிவாள். (உஎ)

வேறு.

குந்த ளக்கருங் கூந்தல் சடிலமாக்
கந்த ரத்தணி கண்டிகை யாரமாச்
சுந்த ரத்திரு நீறுது தைந்தது
சந்தி ரக்கலை போலத்த யங்கிட. (உஅ)

சிற்றி டைக்கொடி தாங்குதல் சீரையாப்
பொற்று ணைக்குழை பூண்டது சங்கமா
மற்றொ ரொப்பிலா மாதுமை கோயிலு
ளுற்ற போதந்த யோகபீ டத்தமர். (உகூ)

கருணை நாயகி காதலொ டுந்தழீஇப்
பெருகு நீரொடு நீருறு பெற்றிபோ
லொருவி லோருரு வுற்றவ ளோடொன்றாய்
மருவி னுள்யோக பீடத்தின் மாதவம். (௩0)

ஒருப தம்மடித் தோர்பத மூசிமேன்
மருவ வூன்றி மலர்க்கையி ரண்டையுங்
குரும ணிச்சடை மீதுகு வித்துமூக்
குருவ நன்னுதி மீதுகண் ணுற்றிட. (௩க)

அவாவொ டுங்கும் பகத்தினுல் வாயுவை
யுவாம தித்தலத் தொன்றவொ டுக்கியே
சிவாய மந்திர நாவிற்செ பித்துமேற்
றுவாத சாந்தத்திற் சோதியுந் தானுமாய். (௩உ)

ஏக போகமா யெங்கும்வி யாபக
மாகி யின்பவ தீதசு கத்தொடு
மோக மாய்க்குருந் தத்துறை மூர்த்தியைப்
பாக வுட்கொடு பண்ணினண் மாதவம். (௩௩)

அந்த வேலையெம் மையன்கு ரோதனைச்
சந்த மாருமை செய்தவங் காத்திநீ
யெந்த வைப்புமுய் பாக்கென் றியம்பலு
நந்த மற்றவ னுந்நயந் தானதை. (௬௪)

செய்யு மேன்மைத் தவத்தின் செயலுணர்ந்
தைய னங்கவட் கற்புத மாம்படித்
துய்ய வெள்விடை மீமிசைத் தோன்றிநின்
றுய்ய யோகதி யானத்து ணர்த்துவான். (௬௫)

உன்றன் மாதவங் கண்டிங் குவப்பொடு
மன்றல் செய்திட வந்தனம் யாமென
வின்றி தென்கொலென் றெண்ணி விழித்தலு
மன்று மேவிம யாசலத் தங்கணோர். (௬௬)

யோக பீடத்திங் குற்ற வுருவொடுந்
தாக மோடங்ஙன் றங்கிடக் கண்டன
ளேக நாதனு முன்பிட பத்தின்மேற்
போக மேவுருக் காட்சி புரிந்தனன். (௬௭)

கண்டு நாணு டெழுந்துகை கூப்பிந
லண்டர் கோன்மணஞ் செய்வதற் காமெயிற்
கொண்ட கோலமுட் கொண்டொரு கோயிலு
ளொண்டொ டிக்கை யுமைபோ யிருத்தலும். (௬௮)

இமைய மன்னனு மேனையு மியாவரு
முமையங் குற்ற வதிசய முண்ணினந்
தமைத ராமகிழ் வுற்ற வமைதியிற்
சமைய வாவயி னியாவருஞ் சாருவார். (௬௯)

புண்ட ரீகனு மாலும்புத் தேளிரு
மண்ட லச்சடை மாதவ ரியாவருங்
கொண்டன் மேயவே தண்டக்கு ழாங்களு
மெண்டி சைக்கண நாதரு மெய்தினர். (௭0)

அற்பு தத்தொடு மண்ணன்முன் போய்த்தொழ
வெற்பு நாதனை நோக்கிவிண் ணோரெலாம்
பொற்பு மேவுநின் பூவையை யண்ணல்வேட்
டிற்பு குந்தின மின்றென வோதலும். (௭௧)

மயன்வி தித்த மணப்பெரு மண்டபத்
தயர்ம ணப்பொலி வுற்ற வுமையைமெய்ப்
பயன்கொள் வெற்பன் பரமற்கு நன்மணச்
சயமு றப்புனற் றூரைய ளித்தனன். (௭௨)

துதிம ணம்புரி தோகையொ டெம்பிரன்
கதிகொண் மால்விடை யேறிக் கயிலையுற்
றதிக மாம்விளை யாட்டின மர்ந்தனன்
பதியு மன்பர் துதித்துப் பரவவே. (சங)

அம்மை யோகநன் காற்றிய பீடத்தின்
வெம்மை தீர்சிறப் போதினம் வேந்தனே
யெம்மை யாளிறை யேவலி னலடை
செம்மை வீரன் றிறமும் விளம்புவாம். (சச)

யோகபீடச்சிறப்புரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கூ0எ.

---

# வீ ர ப த் தி ர ப் ப ட ல ம்.

---

யாவரும் புகழ்சி வானு பவமெவ்வா றிருக்கு மென்னின்
மேவரு முருவொன் றுற்றுப் பெருந்துறைக் கோயின் மேவித்
தாவரும் பூசை யோடு சாறுங்கொண் டடைந்தோர்க் கெல்லா
மோவருஞ் சோறு நல்கி யுவந்துவீற் றிருக்கு மன்றே. (க)

சிறுவிதி யென்பான் செய்த தீமகச் சாலை யெய்தி
மறுவறு முமையாள் சீறித் திருவுரு மறைத்த பின்னர்த்
தெறுவலிக் குறுத்தாட் பூதச் சேனையோ னெற்றி நாப்ப
ணுறுவிழி திறந்தா னங்கின் றுதித்தனன் வீர னென்பான். (உ)

சடைமுடி யண்டத் துச்சி தடவரப் புயந்தி காந்த
முடைபட் நெருங்கக் கண்க ளுலப்பரும் புலிங்கங் கொட்ட
மிடைபுகைப் படலம் வாயின் வெளிப்படப் பிறையுந் தஞ்சென்
றடைதரு மெயிறு தோன்ற வாரழற் சுவாலை வீங்க. (ங)

பலகைவாள் வைரம் வைவேல் படுதழற் கணிச்சி சூல
மிலகுசக் கரந்து ரோண மங்குசம் பாச மின்னுங்
குலவுவன் றண்டந் திண்டோ மரமுதற் குலவ வேந்திக்
கலகமொன் றறத்து மிக்குங் கைபல பொலியா நிற்க. (ச)

கொண்டமே னியிலுண் டாய குறுவியர்ப் பிடைச்ச னித்த
புண்டவா வெயிற்றுப் பேழ்வாய்ப் பூதவே தாளக் கூட்ட
மண்டரு நடுங்க வோரெண் ணாயிர கோடி சூழத்
தொண்டர்தம் பெருமான் முன்பு தொழுதெழுந் திதனைச் சொல்வான். (ரு)

எழுகடல் குடிக்கோ மேரு வரைபெயர்த் தெடுத்து மற்றை
முழுவரை யெலாந்தூ ளாக மோதுபு முடிக்கோ மாலைச்
செழுமல ரோனைக் கையாற் பிசைந்துபொட் டிடுகோ செந்தீ
யொழுகவெங் கணும்வி ழிக்கோ வுறுதரை கவிழ்த்தல் செய்கோ. (சு)

திகைக்கடாக் களிற்றை யொன்றாச் சேர்த்துவால் பிடித்த டிக்கோ
முகைக்குமண் டங்க ளாய முழுதுங்கைக் கொண்டு பந்தி
னுகைக்குமோ ராடல் செய்கோ பற்பல வுரைப்ப தென்றீ
நகைக்கெலா முணவு செய்கோ வருளென நவின்று நின்றான். (எ)

மோகமார் மூடத் தக்கன் முதலியாரு நமக்கு நல்கும்
பாகமின் றென்று கூறிப் பண்ணுவான் மகமன் னான்பா
லேகிநீ பாக முண்டோ வில்லையோ வெனக்கே டைய
னாகிய வவன்ம றுக்கி லடர்த்துவா வென்றா னையன். (அ)

இடுபணி யிதுதா னேவென் றெயிறெலா மிலங்க நக்குக்
கொடுவலிப் பூதஞ் சூழக் குறுகினன் யாக சாலை
விடுதல்செய் யாம னான்கு வாயிலுங் காவன் மேவத்
தொடுகழற் காலான் வைத்துத் துண்ணென வுட்புக் கானால். (கூ)

வீரனுட் புகுத லோடும் வெம்புலிப் போத்துக் கண்டு
சோருமான் குழாங்க ளென்னத் துண்ணென நடுங்கி வீழ்ந்தா
ரியாருமற் றனைய வேலை யழிதகைத் தக்கன் முன்போ
யோருமெம் பெருமான் பாக முண்டுகொ லில்லைகொ லென்றான். (க0)

இலையென மொழியா னுண்டென் றியம்பிடா னிருப்ப வன்னான்
றலையற வாளால் வெட்டித் தழல்படு குண்டத் திட்டு
நிலைகுலைந் தோடு மெச்சன் றலையையு நேரே வெட்டி
யலைபுரிந் தனன்மற் றுள்ள வமரர்கள் பலரு மாய. (கக)

சிறுவிதி மனைவி முன்னாச் செறிந்தபன் மாதர் தம்பாற்
குறுகுபு முன்போ யம்மை கோபத்தில் வருபெண் டெய்வ
நறுவிரைக் குழல்வார் காது நாசிவன் முலைமுன் னாகச்
செறுவலி கொண்டு கொய்து தெறுசின மொழித்த தன்றே. (கஉ)

கொடுவலிச் சுழலுஞ் செங்கட் குறியதாட் பூத மெல்லாங்
கடுகிமற் றமர மாதர் கலையரை யறநெ கிழ்த்துப்
படுமுலைக் குவடு பற்றித் தழீஇத்தழீஇப் பருகி வாய்நீர்
விடுதலற் றிருந்த காம விடாய்தவிர்த் திருந்த வன்றே. (கங)

உடையநெய்க் குடம னைத்து முருட்டுபு பொரியைச் சிந்தி
மிடைதரக் குவித்த வோம விறகெலா மொன்று செய்து
புடைமகக் குழியி னிட்டு நீரனீர் புகட்டிப் போக்கி
நடைமழச் சிறுபூ தஞ்செய் குறும்பினை நவில்வா ரியாரே. (கச)

இவ்வண்ணங் கோபத் தீயை யாகத்தீ யோடு மாய்த்துச்
செவ்வண்ண மேனி வீர னின்றனன் சிவனை யுள்ளி
யவ்வண்ணம் போல வெங்கு மாயவ னதனை யோர்ந்து
நவ்வண்ண மறுப்பா னாங்குத் தோன்றின னைவெள் ளேற்றின். (கரு)

விடைமிசை யமலற் கண்டு தாழ்ந்தெழூஉ வீர னிற்ப
வுடையவ னிரங்கி யாரு முயிரடைந் தெழுமா செய்தி
சடையவ வெனலு மையன் சாற்றிய வாறெ ழுப்ப
கடைதளர்ந் தெழுந்தெல் லாரு நானொடும் பிரானைத் தாழ்ந்தார். (கசு)

தாழ்ந்தெழுந் தொதுங்கி நிற்குந் தண்டுழாய் முகுந்த னாதிப்
போழ்ந்தசிந் தையனை நோக்கிப் பொய்மனத் தக்கன் வார்த்தை
வீழ்ந்தநீர் பட்ட பாடு விரிப்பதென் சிவத்து ரோகத்
தாழ்ந்தமை தீரு மாநம் பெருத்துறை யடைமி னென்றான். (கஎ)

என்றுரைத் தவரைப் போக்கி வீரனோ டிமில்வெள் ளேற்றுக்
குன்றுகைத் தொருவே தண்டங் குறுகிவீற் றிருந்தா னம்மை
தென்றிசைச் செல்லுங் காலைச் சேறிநீ காவற் கென்று
நன்றிசைத் திடலால் வீர பத்திர நம்பன் போந்தே. (கஅ)

அம்மைசந் நிதியி னின்றே காவல்செய் தமரா நின்றான்
செம்மைகொ ளவற்றாழ்ந் திட்ட சித்திகள் பெறுவா ரியாரு.
நம்மையாள் பவன்சொற் பற்றி நாரணன் முதலோர் ஞால
மும்மையேத் தாங்கணெய்தி முருக்கினார் சிவத்து ரோகம். (ககூ)

பகலருந் திறல்சால் வீர பத்திரப் பெருமா னோற்றத்
திகலருஞ் சிறப்பு மம்மை சந்நிதி யியைந்த வாறு
முகலருங் களிப்பிற் சொற்றா மொளிர்பெருந் துறையி லொன்று
தகவருந் தீர்த்த மேன்மை யனைத்தையுஞ் சாற்று வாமால். (உ0)

வீரபத்திரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் சுஉஎ.

---

# தீர்த்தப்படலம்.

---

அயனரிதாழ் தில்லைமூ வாயிரரு மையனே
பயனமையும் வாசகத்தின் வாச்சியநீர் பகருமென
மயன்மருவாச் சபைநேரே மரீஇச்சுட்டி யுணர்த்தினா
ரியன்மருவு செஞ்சரண மெம்மனோ ருயிர்க்கரணம். (க)

நலமாரும் பெருந்துறையி னவதீர்த்த நாளுமுள
வலமாருஞ் சிவமாதி மலரவனீ ருக்கனாயுங்
குலமாரு நவபேத மவையெனக்கூ றுவரறிந்தோர்
சலமாரு மதில்பொடித்தா ரநாதியே சமைத்தனரால். (உ)

ஆயநவ தீர்த்தத்து ளமலமாஞ் சிவதீர்த்த
மேயசபைக் கீசான விதிக்கிலுமை தளிவாயிற்
பாயவெதி ரொருகூபப் படிவமா யினிதமருந்
தோயமதில் வானவருந் துளைந்தாட லரிதாகும். (௩)

அன்னசிவ தீர்த்தத்தி னொருதிவலை யருந்திடுவார்
முன்னமமை மலமாயை கன்மமுத லறமுருக்கிப்
பன்னமல ரணயான்முற் பல்லோரு நறுமுறுப்ப
நன்னலமார் சிவக்கலப்பு நண்ணியனு பவித்தமர்வார். (௪)

மலையரையன் மகள்யோகம் பயிலுதற்கு மருவியநா
ளலைவரிய வத்தீர்த்தத் ததிவிருப்பங் கொடுபுவனத்
தலைவனைத்தாழ்ந் தொருதிவலை தலைமிசைக்கொண் டவர்சன்ம
நிலைகுலையும் படிவரந்தா வெனக்கொண்டு நிறுவினள். (௫)

எண்ணரிய மகத்துவஞ்சால் சிவதீர்த்த மேனையநீர்
நண்ணரிய புகழான்ம நாதகூ பப்பெயர்பெற்
றண்ணரிய வபிடேக மாட்டுதற்கே பாங்காகுங்
கண்ணரிய வதன்பெருமை கட்டுரைக்க வல்லவரியார். (௬)

ஆதிநா யகன்கோயிற் றென்மேற்கி லருளுருவப்
பூதிநா யகன்றழற்கண் பொருந்தநோக் குறப்பாய்ந்த
கோதிலாத் தழலெழுபா தலமுருவக் குதித்தெழுந்த
தீதிலாப் புனற்பெயரக் கினிதீர்த்த மெனப்புகல்வார். (௭)

ஆயதனை யறிஞர்சத்தி தீர்த்தமென வறைதருவார்
பாயவதன் மகத்துவத்தை யாமேயோ பகர்தருவோந்
தோயமதைத் தொடிற்பருகிற் றுளைந்தாடி னேக்குறிலு
ளேயநினைத் திடிற்றகவி னியல்பயனை யளப்பவரார். (௮)

திருந்துபுகழ் மலரயன்புத் திரனன சுவாயம்பு
பொருந்துதவத் தாற்பிறந்த பத்திரரோ ரிருவருளர்
வருந்துதவி லொருவனு மம்பிரிய வர்த்தனனு
விருந்திறல்சான் மற்றொருவன் பெயருமினி யறையக்கேள். (௯)

சத்தான குணமுடையான் றண்ணளிக்கா கரமானன்
முத்தானக் களிற்றரசர் முடிதேய்க்கு மொய்கழலான்
கொத்தான மலர்க்குழலார் மடலெழுதுங் குலக்காம
னுத்தான பாதனென வொருபெயர்பெற் றவனம்மா. (௧0)

அன்னவணியா வரும்புகழு மரும்புதல்வற் பெற்றெடுக்கு
முன்னமுடை யவனாகி மூரிநீ ரவனியிடத்
தென்னதலஞ் சிறந்ததல மெனவினா வித்தெளிந்து
பின்னமற வந்தடைந்தான் பெருந்துறையாஞ் சிவபுரத்தை. (௧௧)

வந்தவனப் பெருந்துறையின் வளமுழுது நனிநோக்கி
யிந்தவளத் தலமொன்றே புவிப்பயனா யிருந்ததல
மந்தமிலா விஃதடைந்தேற் காகாத தென்னென்று
சந்தமுற மிகமகிழ்ந்து தவஞ்செய்யக் கருதினான். (௧௨)

ஒள்ளியதண் புனலாயு மக்கினிப்பே ரொழியாத
வள்ளியதீர்த் தம்படிந்து வயங்கியவெண் ணீறணிந்தே
நள்ளியகண் மணிமாலை புனைந்துநயந் தைந்தெழுத்து
முள்ளியசிந் தையனாகி யொண்மலர்க்கை குவித்தெழுந்தான். (௧௩)

மிக்கவரா யினிதமரும் வெயிலுவந்தார் தமைப்போற்றிச்
சொக்கவிநா யகர்பதமுந் தொழுதுகுருந் தினைவணங்கித்
தக்கவரேத் திடுமொன்ம நாதர்முனஞ் சார்ந்திறைஞ்சி
யக்கமணி யாஞ்சிவயோ காம்பிகைபா தமும்பரவி. (௧௪)

எண்ணியகா ரியமுடிக்க வேண்டுமென வெடுத்தியம்பித்
தண்ணியவா ரழற்றீர்த்தத் தடங்கரையி னடைந்தமர்ந்து
புண்ணியவா ரருளான்ம நாதர்தாள் புந்திகொடு
நண்ணியநூ றாண்டளவு நயந்துயோ கத்தமர்ந்தான். (௧௫)

உண்ணுமே யோகிருக்கு முத்தான பாதனா
ரெண்ணுமே யொழிவார்கொ லடியவருக் கெளியவர்தாந்
தண்ணுமேற் றோன்றாத சடைமுடியோ டயன்முயன்று
பண்ணுமே னியினெதிர்ந்தார் பார்த்தனுட னமரெதிர்ந்தார். (௧௬)

அண்ணலடைந் தமைதெரிந்துத் தானபத னெழுந்துபணிந்
தெண்ணவினி யென்னேயென் றிருகைகுவித் தெதிர்நிற்க
வுண்ணல்விட மாக்கொண்டா ருயர்மேரு முடியமர்ந்து
நண்ணலமை கோளியக்கு மகவளித்தோ நடவென்றார். (௧௭)

சொல்லமுடி யாமகிழ்ச்சி தலைக்கொண்டு தொழுதுபோய்
வல்லதன திருக்கைமரீஇத் தருவனா மகப்பெற்று
நல்லமக மேருமுடி நண்ணவைத்துக் கோளியக்கு
மொல்லமைதி தெரிந்துவந்தா னுத்தான பாதனென்பான். (௧௮)

இன்னுமொரு கதையுரைப்பா மெறிதிரைநீ ரிருந்தடத்து
மன்னுதகட் டகட்டுநெடு வாளைமீன் வெடிபோய்வான்
றுன்னுசெழுங் கற்பகத்தின் கழுத்தொடிக்குஞ் சூழ்வளஞ்சால்
ன்னுபெரு விதர்ப்பமெனும் பைதிரத்து ளொருநகரம். (௧௯)

கனகமதில் புடையுடுத்த காம்பீலி நகர்க்கொருசா
ரனகமலி விபுலமெனு மந்தணர்சே ரியினுள்ளான்
றினகரமண் டலம்பொருவுந் தேசுசா லொருமறையோன்
முனகரிய தொழில்விசுவம் பரனென்ன மொழிபெயரான். (உ0)

அன்னவனுக் கிருவர்மனை வியருள்ளா ராங்கவருண்
முன்னவள்பேர் கனகையொரு முளையுடையாண் முளையில்லாள்
பின்னவண்மற் றவடியரம் பெயர்ப்பதற்கம் மறையவன்மு
னன்னரறம் பலமுயல்வான் றீர்த்தமெலா நணிப்படிவான். (உக)

அதுதெரிமூத் தவணெஞ்சத் தழுக்காறு நனிபூண்டே
யிதுபுரியு முயற்சியெனி னிளையாளுக் கொருமகவு
கதுமெனத்தோன் றிடுந்தோன்றி னமதுகா தலன்செல்வங்
குதுகலம தறவிரண்டு கூறுகிக் குறைபடுமோல். (உஉ)

முற்றியவென் றுயரமெலா முதலோடு முடிப்பனெனப்
பற்றியநஞ் சுணவூட்டிப் பாதகிகொன் றுடவனைச்
செற்றியபா தகம்வருத்தத் தேயமெலா முழிதந்து
மற்றியலோர் வனமடைந்து வன்றியா லுயிர்மாண்டாள். (உங)

கோலத்தா லுயிர்மாய்ந்தாள் குணுங்குருவ மொன்றடைந்து
சூலத்தாற் பொலியங்கைத் தோன்றலா ராணையினுன்
ஞாலத்தா ணீர்நிழலை நண்ணுமே கவன்றலைவாள்
பாலத்தார் விழிப்பெருமான் பெருந்துறையோர் பாங்கடைந்தாள். (உச)

ஆயவிடத் தொருவிருக்க மேலமர்ந்தா ளக்காலை
நேயமிகு புறுவொன்று நிறைதாபம் பெடைக்கொழிப்பான்
பாயவழற் றடம்படிந்து பறந்துமே லெழீஇச்சிதறத்
தூயபுனற் றிவலையொன்று சோர்வொழிபேட் டுனின்றும். (உரு)

சோர்தருபேய் மகளுடம்பிற் றோய்தரவவ் வுருநீங்கிச்
சார்தருபா தகமனைத்துந் தவிர்ந்துதே வுருவாகி
நீர்தருசெஞ் சடையாளர் நெடுங்கயிலைப் பதியடைந்தாங்
கேர்தருமா தேவிபணி தலைக்கொண்டின் பெய்தினளால். (உசு)

அறுவளத்தக் கினிதீர்த்தம் படிந்தவாண் கபோதகம்பெண்
புறுவுடம்பின் விழுத்தியபஃ றிவலையிற்போந் தொருதிவலை
மறுமயற்பே யுடல்படியத் தேவுருவம் வந்ததெனி
லிறுமலரத் தடப்பெருமை யெம்மனோர் சொலற்கெளிதோ. (உஎ)

வேறு.

தண்ணிய வான்ம நாதர் சந்நிதி யவாசித் திக்கி
னண்ணிய நெல்லிக் காவு ணயந்தமர் தருமோர் தீர்த்தம்
புண்ணிய வானோ ரியாரும் போந்துபோந் தாட லாலே
யெண்ணிய தேவ தீர்த்த மென்பரா லதற்கு நாமம் (உஅ)

அன்னதை நாத தீர்த்த மென்றறி வுடையோர் சொல்வார்
பொன்னவிர் கமலம் பூத்த புனலதிற் படிவோ ரியாரும்
பன்னரு மிம்மையோடு மறுமையும் பண்பிற் றுய்த்து
மின்னவிர் சடையான் பாத மேவிவீற் றிருப்ப ரீற்றில். (௨௯)

தென்றிசைக் கடற்றீ ரத்திற் செல்வமுங் கல்வி யுஞ்சேர்ந்
தோன்றிய வளத்தா னூரு மோங்கரி மந்தி ரப்பேர்
துன்றிய புரமொன் றுண்டு சுரநகர் வாழ்க்கை யோரு
நன்றிய லாங்கு மேவ நண்ணுவர் வேட்கை மாதோ. (௩௦)

அந்தநற் புரத்தி லெம்மா னாலய மொன்றுண் டென்று
நந்தமக் கருளு மீச னுமமோ மந்தி ரேசன்
பிந்தலி லருள்சா லம்மை பிரமநா யகியென் பேராள்
பந்தமி லிருவ ருக்கும் பண்ணினர் திருவி ழாவே. (௩௧)

சாறுசெய் தினத்து ளோர்நாட் டையலோ டைய னூர்தி
யேறுகொண் டலங்கா ரஞ்சா ரெழிற்றிரு வீதி யெய்திப்
பேறுதங் கடியார்க் கெல்லாம் பெறற்கருங் காட்சி நல்கிக்
கூறுதன் கோயி லுள்ளாற் குறுகிவீற் றிருந்தா னன்றே. (௩௨)

இருள்செறி கால மாக விற்புகு நடவை தேருந்
தெருளின்மித் திரனென் பானோர் மறையவன் சிகரிக் கப்பாற்
பொருளிலை யெனக்க ழித்த தீபத்துட் பொருந்து மொன்றை
மருளறக் கழியிற் கோத்து வழிக்கொடு நடந்து போனான். (௩௩)

அன்னவன் முன்பு செல்லச் சிலர்தொடர்ந் தகத்துட் போவான்
மின்னகு தீப நோக்கி விரைதரத் தொடர்ந்து சென்றார்
சொன்னவச் சிவால யத்தெண் ணெய்கவர் துரோக மேவ
வென்னரும் வறுமை மூடப் பட்டிறந் தளற்றி லாழ்ந்து. (௩௪)

நெடிதுநாள் கழிந்த பின்றை நிலத்திழி பிறப்பி னுற்றார்
கொடியமற் றிதற்கு மூல மெனக்கூறு மித்தி ரன்றான்
றடிதரா நிரப்பு மூடித் தரையிற்பன் னாளு ழன்று
கடியவெந் நோய்க்கோட் பட்டுக் காலனூ ரடைந்தா னன்றே. (௩௫)

ஆவயி னிரய மெல்லா மளப்பினா ளனுப வித்து
மேவருங் கிருமி யாதி வேறுவே றுதித்து மாய்ந்து
பாவமன் னுமலி யாகிப் பல்லிடத் துழலுங் காலை
யோவரும் பெருந்து றைப்பாற் பிதிர்வன முற்றா னன்றே. (௩௬)

சுடுவனச் சாம்பர் வீழ்ந்து புரளலுந் தூய ஞானம்
வடுவறச் சிறிதுண் டாக மற்றந்த வலியி னாலே
படுமலர்த் தேவ தீர்த்தம் படிந்துபா தகந்த டிந்து
கொடுமலக் குறும்பு மாய்த்துக் கூடுபே ரின்ப முற்றான். (௩௭)

அறத்தினை வேண்டி னாலு மளப்பரும் பொருள்க ளாய
திறத்தினை வேண்டி னாலுந் திகழ்தரு மின்ப மென்னு
நிறத்தினை வேண்டி னாலு நிகழுமிம் மூன்ற னுக்கும்
புறத்தினை வேண்டி னாலும் பொலியநல் கிடுமத் தீர்த்தம். (௬அ)

உமைமண வாளன் கோயி லுத்தர திசையின் கண்ணே
யமைசிறப் புடைய வீதிக் கருகொரு தீர்த்த முண்டாற்
கமைமுனி வரர்க ளாடிக் களித்தருந் தவஞ்செய் நீராற்
சமைதரு முனிவர் தீர்த்த மென்மனார் தலைமை சான்றோர். (௬௯)

இன்னுமற் றதனை விந்து தீர்த்தமென் றெடுத்துச் சொல்வார்
பன்னுமற் றந்நீ ராடிற் பாதக மனைத்து மாயுந்
துன்னுமும் மலக்கி ழங்குந் தொட்டெறி வன்மை மேவு
மின்னுமஞ் சடையான் பாதக் கலப்புமே விடுவ துண்மை. (௭0)

கொழிதமிழ் மணக்குஞ் செவ்வாய்க் குறுமுனி வரனெங் கோமான்
பழிதபு பொதிய மேவும் படிவழி யியங்குங் காலைக்
கழிதவத் துருவா சன்றன் காதல ரிருவ ராய
வழிதகைக் கொடுவா தாவி வில்வல னடுத்து மேவி. (௭௧)

வஞ்சகத் தூட்டல் கண்டு மற்றவர் தமைநீ றுக்கி
நெஞ்சகத் துறுவன் மைந்த ரிவரென நினைந்து நாளு
மஞ்சகத் தொழித ராத பெருந்துறை மருங்கு வந்து
தஞ்சகக் கழுவா யாற்றத் தமிழ்முனி வரனி னைந்தான். (௭௨)

தண்ணிய முனிவர் தீர்த்தஞ் சார்ந்துசங் கற்பங் கூறிப்
புண்ணிய முனிவ னாடிப் போர்த்திய பழிய னைத்து
மண்ணிய விசேடம் பெற்றான் மற்றுமத் தீர்த்த மாடி
யெண்ணிய பேறு பெற்றா ரெண்ணிலா ருலகி னம்மா. (௭௩)

அகத்திய முனிவன் பின்னு மமைந்தவெள் ளாற்றின் மூழ்கி
மகத்துவ மிகும்வெள் ளாற்றின் வடகரை யிலிங்க நட்டுத்
தகத்திகழ் பூசை செய்து தன்பெயர் நிறுவிப் போன
னிகத்தியல் போக மாதி யெய்துவா ரதுபூ சிப்பார். (௭௪)

அங்கண ருபாத்தி யாய ராயவர் கழக மாகத்
தங்கிய வாங்கோர் தானந் தனக்குப்பச் சிமதிக் கின்கட்
பொங்குமோர் தீர்த்த முண்டாற் புகரற வசுரர் தோய்ந்து
பங்கமில் வரங்கள் பெற்றா ராதலாற் பாரி னுள்ளோர். (௭௫)

வலிதரு மசுர தீர்த்த மெனும்பெயர் வழங்கா நிற்பர்
சலிதரு தரமி லாத சதாசிவ தீர்த்த மென்றும்
பொலிதரு புலவர் சொல்வா ரங்கதிற் புகுந்து மூழ்கின்
மெலிதரும் பாவ மெல்லாம் வீட்டின்ப மெய்து மன்றே. (௭௬)

மருவிய குருந்தி னுக்கு வாயுமூ லையிலோர் தீர்த்தம்
வெருவற வாயு மூழ்கி வயிற்றுநோய் வீட்டி வாழ்ந்தா
னொருவிலத் திறத்தால் வாயு தீர்த்தமென் றுரையா நிற்பர்
திருவினர் மகேச தீர்த்த மென்னவுஞ் செப்பு வாரால். (சஎ)

உரைத்தவண் புனலா றின்னு முரைக்கவேண் டியவோர் மூன்று
திரைத்தடம் பின்பு சொல்வாந் திருப்பெருந் துறைய கத்து
வரைத்தடந் தோட்சூ ராதி யாவரு மடிய மாட்டிப்
புரைத்தசீர்க் குமாரன் வந்து பொருந்திய திறமுஞ் சொல்வாம். (சஅ)

தீர்த்தப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கூஎடு.

# குமாரர்வருகைப்படலம்.

அதுமுத லுதுமுத லென்ற றைந்திடா
திதுமுத லெனத்துணி யியல்பு நல்கிடு
முதுமுத னூலென மொழியும் வாசகப்
புதுமுதன் மலரடி புந்தி மன்னுமால். (க)

ஒருசிறு விதிமகச் சாலை யுற்றவன்
றருதக ரூனுணச் சமைந்த வானவர்
வெருவறக் கடையெலா மேனி கொண்டெனப்
பெருவலிச் சூர்முத லோர்பி றந்தனர். (உ)

எண்ணினு ளருந்தவ மியற்றி நெற்றித்திக்
கண்ணினன் பால்வர மனைத்துங் கைக்கொண்டா
ரண்ணுபே ரண்டமா யிரத்தெட் டாளுவா
ருண்ணிலா மருள்சிறி தேனு முற்றிலார். (ங)

அன்னவ ரலைத்திட வலையின் வாய்த்துரும்
பென்னவா னவரெலா மலைத லேய்ந்தனர்
சொன்னமா தேவர்க்குத் துரோகஞ் செய்பய
னின்னதோ வின்னமு மெய்து மென்பரால். (ச)

ஆலவாய்க் கரும்பென வவுண ராலுடை
மாலயன் முதலிய வானு ளோரெலாம்
வேலைநஞ் செழத்தமைக் காத்த வித்தகன்
சோலைசூழ் திருப்பெருந் துறைவந் தெய்தினர். (ரு)

அய்யனே யபயம்வெவ் வரிண மேந்திய
கய்யனே யபயம்வெங் காலற் செற்றகாற்
செய்யனே யபயமா தவத்தர் சிந்தைவாழ்
மெய்யனே யபயமியா மெலிவு மேவினேம். (சு)

முத்தனே யோலமெம் முதல்வி கொண்டரு
ளத்தனே யோலம்விண் ணவாம்பெ ருந்துறைக்
கத்தனே யோலமெங் களைக ணாகிய
நித்தனே யோலமென் றிறைஞ்சி நின்றனர். (எ)

ஆயவக் காலையி லான்ம நாயகர்
நேயமுற் றவர்முகம் பார்த்து நீரெலாங்
காயமேற் போம்வட கயிலை யண்ணுமின்
பாயநும் பகைதபு பான்மை மேவவே. (அ)

என்றலும் வடகயி லாய மெய்திஞா
ரன்றவி னந்தியெம் மண்ணலுற்றொழூஉ
மன்றமர் பிரானுக்கெம் வரவு செப்பென்று
ரொன்றவ னனுஞைபெற் றுள்பு கச்செய்தான். (கூ)

உருத்திர மூர்த்தியை யுவந்து கண்டனர்
கருத்தமை தரவடிக் கடிப ணிந்தனர்
பருத்தெழு மகிழ்ச்சியிற் குடந்தம் பட்டனர்
திருத்தக வவர்முக நோக்கிச் செப்புவான். (க0)

ஒன்றுநீ ரஞ்சலி ரும்பர் காள்வளங்
குன்றுறுப் பெருந்துறை கூடி மேவலா
லன்றுநும் பகையெலா மழிவ தாகுமா
லின்றுநா மதற்குவே றியற்ற லுண்டென்று. (கக)

ஆறுமா முகங்கள்கொண் டமர்ந்துட் டாதுவை
வீறவா னுதற்கணில் வெளிப்ப டுத்திடக்
கூறுகா லழறலைச் சுமந்து கொண்டுபோய்த்
தேறுமா கங்கையிற் செலுத்தக் கங்கையும். (கஉ)

மறுவறு பெருஞ்சர வணத்தி னுய்த்திட
வறுபொறி களுமறு குழந்தை யாகியோங்
குறுதினத் துமையவ ளொன்று செய்தொளி
பெறுகயி லைக்கிரி பிறங்க வுய்த்தலும். (கங)

ஆறுமா முகத்தவ னுய நம்பிரான்
வீறுசெய் தம்பிய ரொடும்வி ராவியே
மாறுதீர் பெருவிளை யாட்டின் மன்னுத
றேறுமா லயன்முதற் றேவர் கூடுபு. (கச)

மறைமுத லடித்தலம் வீழ்ந்து வாழ்த்தியே
முறையிட விரங்கிய முக்க ணாயக
னிறைபதி னொருவனை நிகழ்தன் சத்தியை
யுறைபடை யாகச்செய் தங்கை நல்குபு. (கரு)

இன்னும்வேண் டுவவெலா மினிதி னீந்திவட்
டுன்னும்வா னவர்பகை தொலைத்து வாவென
மின்னுதம் பியரொடும் பூத ரோடுமேய்
மன்னுதா ரகனுயிர் மடிய மாய்த்தபின். (கசு)

வழியமர் தலமெலாம் வழுத்தி யாவரு
மொழியலை வாயிடை யமர்ந்து முந்துபொன்
பழியவு ணர்கணிலை பகர வோர்ந்தட
லொழிவரு மிளவல்சூ ரூருற் றெய்யென. (கஎ)

மீண்டபி னியாவரு மேவிப் பின்வர
மாண்டசீர் வீரமா மகேந்தி ரம்புகுந்
தாண்டவ னவுணர்த மணிக மாய்தரத்
தூண்டடு படையெலாந் தூண்டல் செய்யுநாள். (கஅ)

அரிமுகத் தவுணனே யாதி யாகிய
வெரிமுகத் தவரெலா மிறந்து போம்படி
தெரிபடை செலுத்திமேற் றிகழுஞ் சட்டியி
லுரியசூ ராயமா வுடல்பி ளந்தனன். (ககூ)

கோழியு மயிலுமாக் குலவ னோக்கியாங்
கூழிகா ணிருங்கொடி யூர்தி யாக்குபு
வாழிவா னவர்சிறை விடுத்தொர் மால்வரைச்
சூழியா னையின்பிடி தோள்பு ணர்ந்தரோ. (உ0)

ஏலும்வா னகங்குடி யேற்றி மாமறை
நாலுமோர் பெருந்துறை நண்ணி யப்பனை
யாலுமே தகவுசா லன்பிற் போற்றிட
மாலுமா றிலாரொடும் வந்த னன்னரோ. (உக)

அம்மையப் பனைத்தொழு தடிவ ணங்குபு
வெம்மையில் பெருங்களி மேவு சிந்தையான்
கொம்மையொண் மயின்மிசைக் கொண்டு கோபுரச்
செம்மைசே ருத்தர திசையீ சானத்தில். (உஉ)

வடதிசை நோக்குபு மகிழ்ந்து வைகினா
னுடனடைந் தவரெலா மொருங்கு நோக்கியாங்
கிடமிகு பெருந்துறைக் குமார வென்றுள
மடனிகு மன்பொடு வணங்கி வாழ்த்தினார். (உங)

கூறிய பெருந்துறைக் குமாரர் சேவடி
நாறிய மலர்பறித் தணியு நல்லவ
ரேறிய சனன்பா தகமெ லாமிரித்
தூறிய சிவானந்தத் துவந்து மன்னுவார். (உ௪)

கொடிமதிற் பெருந்துறைக் குமாரர் வந்தவா
ருெடிவற வுரைத்தன மோங்கற் ரேளிஞய்
கடிதலில் பெருந்துறை யெனற்குக் காரணம்
படியற விளம்புவாம் பண்பிற் கேட்டியால். (உரு)

குமாரர்வருகைப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் எ00.

# பெருந்துறைப்படலம்.

கதிரழல் கண்ணே மெய்யே கஞ்சமே விருப்பான் பாகே
யதிர்வளைக் கரனம் பேறில் லேயினு மாவதாக
வெதிரில்வான் பரமா காரென் றியற்றமி ழுண்மை சொற்ற
முதிர்புகழ் வாத வூரெம் முதல்வரே யெமையாட் கொண்டார். (க)

இறையவ னொருமா தேவ னேயெனத் துணிந்த நீரார்
மறைமுழு வதுமு ணர்ந்து வைதிகத் துறையி னின்ருர்
குறையற வங்க மாதி யாவுமுட் கொண்ட சீலர்
பொறையுரு வமைமுந் நூறு மறையவர் புகழான் மிக்கார். (உ)

ஆற்றறீத் தொழிலே யின்னு மறைபசுக் கொலையே யேனு
மேற்றலோர் பழியு மில்லா ரியாவருந் தொழும்பே றுற்ருர்
சாற்றலென் னெம்பி ரானைத் தங்களு ளொருவ னுகப்
போற்றல்கொண் டுவப்பா ரென்னி லியாமேயோ புகழ வல்லேம். (௩)

தங்களு ளொருவ னுகத் தம்பிரான் றன்னைப் பெற்ற
துங்கமார் கதையென் னென்னிற் சொல்லுவா மன்ன கேண்மோ
திங்களங் குலத்த னுய செழியர்கோ மகனெ ருத்தன்
பங்கமி லான்ம நாதர் பணிசெயற் குரிமை யாய்ந்து. (௪)

கங்கைசூழ் காசி நின்றுங் கற்றமுந் நூறுவாய்மைத்
துங்கமா மறையோர் தம்மை வருவித்தான் ரேலா மேன்மை
யங்கவர் பாண்டி நாட்டி னவிழ்மலர்க் குருந்த நாளுந்
தங்கிய வனத்தை மேவச் சுகுணபாண் டியனுஞ் சார்ந்தான். (ரு)

வழுதியர் பெருமாற் காக்கங் கூறினர் மறையோ ரெல்லாந்
தொழுதன னிருக்கை நல்கித் தூயபொற் கலிங்க முந்நூ
றெழுகொளித் தட்ட மேலா லெண்ணின னெருங்கு வைத்துச்
செழுமுகத் தொவ்வொன் றுகச் சிறப்புறக் கொடுத்தா னன்றே. (சு)

எஞ்சிய தொன்றேற் பாரிங் கில்லாத குறையென் னென்றான்
விஞ்சிய புகழார் தம்மை மேதகப் பலகா லெண்ணி
யஞ்சிய மனத்த ராகி யையமுற் றொருவர்க் காணேந்
துஞ்சிய புகழா யென்ன செய்குவாஞ் சொற்றி யென்றார். (எ)

வழுதியு மறைவ லாரு மயங்கின ரிருக்குங் காலை
யெழுதரு மறைக டேறு விறையவன் குருந்தி னின்று
முழுமறை யவனுத் தோன்றிப் பூழியன் முன்ன ரெய்திச்
செழுமுந்நூற் றுவரெம் மோடேன் றுரைத்தனர் தியக்கந் தீர்த்தார். (அ)

இழுதையர் தமைச்சா ராநா மெஞ்ஞான்று மிவரை நீங்கேந்
தழுவுவ மெனநீ றள்ளி வழுதிதன் னுதலிற் சாத்திப்
பழுதறு மாக்கங் கூறிப் பரவுபொற் கலையு மேற்றுத்
தொழுதகு மறையோர் கூட்டத் தொருவராத் துன்னி னூரால் (கூ)

மதிநலம் பொலிமுந் நூற்று வருளிவ ரொருவ ரென்றே
யதிசயம் பயப்ப வான்ம நாதருக் கறைந்தா ரோர்பேர்
திதிபுரி தென்னர் கோமான் மறையவர் செய்யு மன்புந்
துதியிறை யவர்தாஞ் செய்யு மருளுஞ்சீர் தூக்கி நின்றான். (கo)

மின்னகு வேலான் செம்பொன் மாளிகை வெவ்வே றாக்கி
யன்னவர்க் குதவி யவ்வூர் மானிய மாக நல்கி
யின்னமும் வேண்டுஞ் செல்வ மியாவையு நிரப்பிப் பின்னர்த்
தன்னக ரடைந்தா னான்ம நாதர்தா டலைமேற் கொண்டே. (கக)

ஓதிய மறையோர் தம்மு ளொருவரா யான்ம நாத
ராதியில் வந்த வாறீ தறைந்தன மப்பாற் கேண்மோ
சோதியை யான்ம நாதச் சுயம்புவை யருச்சித் தேத்திப்
போதியன் மறைவ லானும் புகழ்மறை யவர்கள் வாழ்நாள். (கஉ)

எண்ணிய மறையோ ரெல்லா மிராப்பக லன்பு பொங்கப்
புண்ணிய வான்ம நாதர் பூசனை முயலு மாற்றா
லண்ணிய சிறுவர்க் கத்தி யயனஞ்செய் விப்ப தற்கோர்
தண்ணியர் வேறி லாமைத் தளர்வுளத் தடைந்தா ரன்றே. (கங)

இருமுது குரவர் கோயிற் பணிவிடை நடக்கென் ஞான்று
மொருவரும் வேலை யாகு மொருபெரும் பேறு பெற்றோம்
வெருவறு சிறார்க்கு வேதம் பயில்விப்பார் வேறு காணேந்
திருவரு ளுணரே மென்று சிந்தைசெய் திருக்குங் காலை. (கச)

மான்றசிங் ஞைதயராய் வந்து மாலயன் முதலி யோர்க
டோன்றரின் றிரத்தல் செய்யச் சுடுவிட மமுதாக் கொண்டார்
சான்றமா மறையோ ருள்ளத் தளர்வினை யொழியார் கொல்லோ
வான்றதா மேயு பாத்தி யாயராய் வெளிக்கொள் வாரால். (கரு)

எங்கணும் வியாபித் துள்ள வழகெனப் பட்ட வெல்லா
மங்கணுற் றொருவி ருத்த வடிவமா யமைந்த தென்னத்
திங்கணன் கமரா நின்ற செஞ்சடை யான்ம நாதர்
கங்கணுன் கினன்வேண் டாவோர் கிழவுருக் கைக்கொண் டாரால். (கசு)

மன்னிய நுமையின் வேணு வனத்திடைப் பெற்ற தேயோ
வன்னிய மில்லாப் பாசு ரதனிடைப் பெற்ற தேயோ
மின்னிய வின்னு மெங்குப் பெற்றதோ விளம்பீ ரென்னத்
துன்னிய வேணுத் தண்டஞ் சுடரொரு கரங்கொண் டேன்றி. (கஎ)

அரைக்கலை முடியி னின்று மரைக்கலை யாய தென்னப்
புரைத்தவெண் கலிங்கம் பின்பு போக்குகோ வணத்தி னோடு
வரைத்தமுன் கொய்செ ருக்கு மடித்தெடேஉச் செருகி மேலா
லுரைக்குமே கலைவி ளங்க வுடுத்தது சரியக் காட்டி, (கஅ)

மதியமு தொழுக்கி யாங்கு வயங்குமுப் புரிநூற் கிட்ட
பொதிதரு முறைகொ லென்னப் பொற்றமேற் கலிங்கஞ் சாத்தித்
துதியபாற் கடலி னுப்பட் டோன்றிய மொக்குண் மேலோர்
பொதியபுண் டரீகஞ் சார்ந்தாற் போனரை முடியின் ஞல. (ககூ)

எவ்வுருக் கொண்ட போது மிதுவிடே மெனக்கொண் டாங்குச்
செவ்விய நுதலின் மெய்யிற் செறிந்தவுத் தூள னத்தோ
டவ்விய மனுக்கு நீற்றுப் புண்டர மழகு செய்து
கவ்விய தாய வெள்ளிக் குப்பாயக் கட்டிற் றோன்ற. (உ0)

திருத்தகக் கொண்டு மெய்யிற் சிவமணங் கமழ்வ தோர்ந்து
பருத்தகார் வண்டி னங்கள் பற்பல வந்து வீழ்ந்தாங்
கருத்தநான் மறைக ளேத்த வவிருங்கண் மணிகள் பல்ல
பொருத்தமார் சென்னி யாதி யிடமெலாம் பொலியா நிற்ப. (உக)

வளையுருத் திரிந்து வேறோர் வளையுருக் கொண்ட தென்னக்
களையவிர் செவியிற் செம்பொற் குண்டலங் கவினச் சேர்த்தே
யிளைமதுத் துழாயி னுன்க ணெனும்பது பிணங்கா நிற்கத்
தளைபவித் திரமோ ரங்கை விரற்றலைத் தயங்கப் பூண்டு. (உஉ)

எழுதுதற் கரிய தாகி யியைந்ததோர் பாதுக் காப்புச்
செழுமல ரடியிற் சேரத் திகழ்வலக் கண்ணின் வெப்பந்
தழுவுதன் மறைக்கு மாறோர் தடங்கரங் கவிகை தாங்க
முழுமுத லவரிவ் வாறோர் முதுவடி வுற்று ரன்றே. (உஙு)

தளர்நடை தனக்கு மோராற் றலைச்செயுந் தண்ட மென்று
கிளருல குரைத்த றேற்றக் கேடிலஃ தூன்றிக் கொண்டு
விளர்குடை நிழலி யங்கி வேதிய ரவைமுன் னாக
வளரொளி மறையோர் வந்தார் வாய்சிவ சிவவென் றார்ப்ப. (௨௪)

வந்தமா மறையோர் தம்மை யிருந்தமா மறையோர் கண்டு
முந்தநே ரெழுந்து சென்று முகமலர்ந் தினிது போற்றிச்
சந்தமார் தமதி ருக்கை கொடுவந்து தாழ்ந்தி ருத்தி
யெந்தவூ ரிருந்தும் போந்தீ ரையரே யியம்பு மென்றார். (௨௫)

எங்குநா மிருப்போ மூரென் றிசைப்பதொன் றில்லை யேனுந்
தங்குவாஞ் சிவபு ரத்துந் தவாதவன் பினர்த மாட்டு
நங்குதீர் மறைவல் லீர நாதர்க்கோ ரிடமு முண்டோ
பொங்குநூல் சிறுவ ருக்குப் போதித்தல் வல்லே மென்றார். (௨௬)

ஐயரிம் மாற்றங் கூற வந்தண ராகி யுள்ள
செய்யருண் மிகம கிழ்ந்து சிறுவர்போ தனையில் வல்ல
மெய்யரே லோரி ருக்கு விளம்புவீ ரென்றார் நாலெண்
கையர்கா ணாதார் செவ்வாய் மலர்ந்தனர் கருணை செய்வார், (௨௭)

வன்னமே பதமே யாரும் வருத்துறை கிரம மேமேற்
சொன்னவான் சடையி ருக்கே தூயபஞ் சாதி யேமற்
றுன்னரும் பிறவே யெல்லா முதாத்தமுற் சுரத்தி னோடு
மன்னவெத் திறங்க ளுங்கார் மழையெனப் பொழிந்தா ரன்றே. (௨௮)

அந்தநா ளுரைத்தா ரிந்நா ளறைவதோ ரருமைத் தாமோ
பந்தமா மறவி யாதி யுயிர்க்குணம் பரித்து ளாரோ
சந்தமா ரனைத்துங் கேட்டுச் சதுமறை வல்லா ரென்றே
நந்தமா மறையோ ரெல்லா நவிலொணா வுவகை பூத்தார். (௨௯)

சிறுவரீங் குள்ளார்க் கத்தி யயனஞ்செய் வித்தல் வேண்டு
மறுவறு நுமக்கென் வேண்டும் வருத்துறை செய்வீ ரென்னப்
பெறுவதும் பிரிய மல்லாற் பிறிதெவ னமக்கு வேண்டு
முறுபசிக் கன்னந் தம்மி னுதவொன்றே போது மென்றார். (௩௦)

அன்னதே லைய ரேயெம் மகந்தொறு மொவ்வோர் நாளா
வின்னமு தருந்து வீரென் றிசைத்தன ரிசைந்தா ராகிச்
சொன்னபன் மகாரைக் கூட்டித் தூயவோ ரிடத்த மர்ந்து
நன்னலம் பெருக வோது வித்தலை நடாத்த லுற்றார். (௩௧)

தொழுகுலத் தவர்சி றார்மேற் றூயதாங் கருணை நாட்டம்
பழுதறு முபாத்தி யாயர் செலுத்துபு பாடஞ் சொல்லச்
செழுமதிப் பிறைபோற் கல்வி தினந்தொறும் வளர்த னோக்கி
யெழுதரு முவகை பொங்க விருபிறப் பாளர் வாழ்நாள். (௩௨)

மன்னிய மதுரை மேய வரதுங்க வழுதி யூழற்
றுன்னிய சுவர்க்க முற்ற னுவன்மகன் கௌமா ரன்றன்
மின்னிய மவுலி சூடி மேதினி புரக்கு நாளிற்
றுன்னிய குறும்பர் தங்க டோன்றலா இயலுண் டாக்கன். (௩௩)

கலையுணர் வழுதி யாய கௌமார னட்புப் பெற்று
நிலையுரி மையும்பெற் றுனய் நிகழ்பவன் கொடிய தீமை
யலைசெயற் கஞ்சா னெங்க ளான்மநா யகரைப் போற்றுந்
தலைமையந் தணர்தம் பூமி தனைக்கவ ரெண்ணங் கொண்டான். (௩௪)

தன்னுடை நகர்க்க டுத்த நகரமாத் தங்க லாலே
மன்னுடை மறையோர் வைகுஞ் சிவபுர வளப்பார் முற்று
மென்னுடை நிலமா மென்றே யெண்ணுது கவர்ந்து கொண்டான்
முன்னுடை வழுதி நல்கு முறிவிலா வணத்தி னேடும். (௩௫)

பரம்பர வான்ம நாதர் பணிவிடை செய்வா ரென்று
நிரம்பமை மறையோ ரென்று நெஞ்சத்துச் சற்று மெண்ணு
வரம்பறு கொடியோ னெல்லாங் கவர்ந்தனன் மறையோ ரெல்லா
முரம்பயில் செயலொன் றில்லா ரொய்யென வாட்ட முற்றார். (௩௬)

வழுதியோ விளைய னன்னுன் மாட்டதி நட்புப் பெற்றான்
பழுதுசெய் குறும்பர் தோன்றற் பாதகம் புரிலுண் டாக்க
னெழுதரும் புகழான் முன்னு ளியைதர நமக்க ளித்த
முழுவதுங் கவர்ந்தா னியாஞ்செய் முறையிஃ தென்று தேரோம். (௩௭)

மறையவர் நிலமென் றோதா வணமுங்கைக் கொண்டா னட்சி
முறைதன தாகச் செய்தான் முற்றிய வயலார் காட்சித்
துறையையுந் தவிர்ப்பா னென்ன செய்யலாந் துணிபென் னேயெம்
மிறையவ ரான்ம நாதர் திருவுள மென்னே வென்பார். (௩௮)

மறைவழி யியற்றுஞ் சந்தி வந்தனை தவிர்ந்து ளோமோ
குறைபசி யென்ற டைந்த குணத்தரை விலக்கி னேமோ
வறைபர தனங்கொண் டோமோ வான்மநா யகர்தம் பத்தித்
துறையினிற் றப்பி னேமோ சூழ்ந்ததித் தீமை யென்பார். (௩௯)

அய்யரே யெம்மை யாளு மான்மநா யகரே மேனிச்
செய்யரே யென்றுந் தீராச் செல்வரே மழுமா னேந்துங்
கையரே காலற்காய்ந்த காலரோ யெக்கா லத்து
மெய்யரே யெளியே மென்னே பிழைத்தனம் விளம்பீ ரென்பார். (௪௰)

வழுதியந் நாண மக்கு வருவாயோர் குறையின் றாகத்
தொழுதுத வியவி தத்தாற் றுயாறத் துய்த்தல் செய்து
பழுதற வான்ம நாதர் பணிவிடை செய்து வந்தோ
முழுவதுங் கவர்ந்தான் பாவி முன்னியென் னுவ தென்பார். (௪௧)

உயிர்முழு துவந்து காக்கு மொருத்தியோ காம்பி கைத்தாய்
செயிரற நம்மைக் காத்தல் செய்யாது விடுமோ வென்பார்
கயிரவப் பகைவி டுக்கு மாதவங் களிப்பிற் கொண்டார்
பயிர்நிலங் கவர்ந்தான் றீங்கும் பரித்துவந் தனரோ வென்பார். (சஉ)

அந்தணர் தம்மு ளியாமு மொருவரென் றன்று வந்து
சந்தன வெற்ப னல்குஞ் சன்மான மும்பெற் றுள்ளார்
நந்தமை யாளா தெங்கு நடந்தனர் போலு மென்பா
ரிந்தவண் ணம்பல் லோரு மிரக்கமுற் றிதுது ணிந்தார். (சங)

செழியன்மற் றினைய னாக விருக்கினுஞ் செழிய னுக்குக்
கழியுநட் பாள னாக விருக்கினுங் கடிய பாவி
யொழிவிலச் செழியன் றன்போ யுற்றதை யுரைப்போ மாகில்
வழிவிடுந் தெய்வ மென்னா மறையவ ரொருப்பட் டாரே. (சச)

அன்னதோர் பொழுது பாத்தி யாயரா யிருக்கு மையர்
பன்னகா பரணர் கூடற் பதிவயி னடைந்து தென்னன்
முன்னர்நீ ருரைப்ப தென்னே மொழியினு மறிய வென்றார்
தன்னமும் வஞ்ச மில்லார் சாற்றிட லுற்றா ரன்றே. (சரு)

அரசனுக் காக்கங் கூறி யருகுசென் றிருந்து கொண்டு
பரசுநான் மறைய ருத்தம் பகர்துமென் றொருவர் சொற்றார்
விரசுப நிடத மெல்லாம் விரித்தெடுத் துரைப்போ மந்த
வரசுகு ணத்தோ னுய மன்முளொன் றொருவர் சொற்றார். (சசு)

ஒருவரா கமங்க ளெல்லா முணர்த்துதுந் தெரிய வென்றா
ரொருவரா கமசா ரத்தை யுணர்த்திடி னுவக்கு மென்றா
ரொருவர்நஞ் சத்த நூலா லுலகெலா முவக்கு மென்றா
ரொருவர்மீ மாஞ்சை யுள்ளு முத்தர முரைப்போ மென்றார். (சஎ)

ஒருவர்நஞ் சிவபு ரத்தின் மான்மிய முரைப்போ மென்றா
ரொருவரக் கினிதீர்த் தத்தின் பெருவள முரைப்போ மென்றா
ரொருவர்நம் மான்ம நாத ருண்மையை யுரைப்போ மென்றா
ரொருவர்யோ காம்பி கைத்தாய் மகத்துவ முரைப்போ மென்றார். (சஅ)

ஒருவர்பல் புராணத் துள்ள வுண்மையைத் தெரிப்போ மென்றா
ரொருவர்பல் லிதிகா சங்க ளுள்ளன வுரைப்போ மென்றா
ரொருவர்நன் மிருதி யெல்லா மொழிவற வுரைப்போ மென்றா
ரொருவர்மற் றிவற்றா லென்னை நியாயமியா முரைப்போ மென்றார் (சகூ)

ஒருவர்மந் திரநன் னூலி னுள்ளவை யுரைப்போ மென்றா
ரொருவர்நாற் பத்து முக்கோ ணத்தியல் புரைப்போ மென்றா
ரொருவர்நீ றளித்த லோடாக் கமுமினி துரைப்போ மென்றா
ரொருவர்நா மங்க ளாதி பவந்தென வுரைப்போ மென்றார். (ருo)

இவ்வித முரைத்தல் கேட்டே யிளநகை வாயிற் ரேன்றச்
செவ்விய மறையீ ரியாமும் வருதல்சிந் தித்தோ மென்று
ரவ்விய மில்லீ ரத்தி யயனஞ்செய் வித்தல் வல்லீர்
கவ்விய நீருங் கூடிற் காரிய சித்தி யென்றார். (ருக)

என்றுரை யாடி யாரு மிணர்மலர்க் குருந்த மூல
மொன்றுற வடைந்து போற்றி யுவப்புறு மனுவை பெற்றுத்
துன்றுமின் சுவையான் மிக்க தோட்கோப்புப் பொதிசோ றேந்தி
யன்றலின் மதுரை நோக்கி யடைதர வழிக்கொண் டாரால். (ருஉ)

தண்டமொன் ஞெருகை யூன்றித் தளர்நடைக் கிகலுண் டாக்கிப்
பண்டரி யுணராப் பாதம் பார்மக ளுடம்பு தோயக்
கண்டவ ரதிச யித்துக் கனிந்துநெஞ் சுருகா நிற்க
வண்டர்நா யகரோ யாய வையருந் தொடர்ந்து சென்றார். (ருஙு)

வழிப்படு தலங்க டோறும் வழிபடு நியமத் தோரா
யிழிப்பருந் தீர்த்த மாடி யிலிங்கநா யகரைப் போற்றிக்
கழிப்பரும் பொதிசோ றுண்டு தண்ணீரும் பருகிக் காதல்
செழிப்புற வன்று பார்ப்பார் சேரியிற் றங்கிப் போவார். (ருச)

மலைவனங் கலுழி பண்ணை வரம்பில கடந்து சென்று
கலையென வாடல் செய்த கண்ணுதன் மதுரை சார்ந்தாங்
குலைவரும் விமானக் கோயி லுட்புகூஉப் பணிந்து போற்றித்
தலைமறை யவர்க ளியாரும் பாண்டிய னவைமுன் சார்வார். (ருரு)

பாதகக் கொடியோன் செய்த படிறொழித் தருள்வீ ராயின்
மோதகத் தொடுதெங் கங்காய் முந்நூறு முந்நூ ருக
வாதவப் பிரிய ரேநீ ரமுதுசெய் திடுவீ ரென்று
போதகத் தலைமை யாளர் புகன்றனர் போற்றிப் போவார். (ருசு)

செழியர்தம் பெருமான் கோயிற் கடைத்தலை சென்று நின்றே
யொழிவருங் காவ லோர்ப்பார்த் துரைமினெம் வரவை யுங்கள்
பழிதபு மரசற் கென்றார் நீவிர்யார் பகர்மி னென்னக்
கழிவளச் சிவபு ரத்து மறையவர் காணு மென்றார். (ருஎ)

காவல ரரசன் முன்போய்க் கைகுவித் திறைஞ்சி நின்று
மேவலர் புரங்கள் செற்றார் சிவபுர மேவி வாழும்
பாவலர் சீர்த்தி மிக்க பனவர்க ணின்னைக் காணு
மாவல ராகி வந்து கடைத்தலை யடைந்தா ரென்றார். (ருஅ)

மேயவந் தணர்க ணம்முன் விரவுமா விடுக்க வென்று
ஞயபொற் கடைகாப் பாள ரந்தணர் முன்ன ரெய்தி
நேயநம் மரசன் முன்னர் நீவிர்சென் றடைமி னென்னப்
பாயபன் மறையுந் தேறும் பனவரோ டடைந்தா ரியாரும். (ருகூ)

தென்னவன் முன்ன ரெய்தித் திருத்தகு மாக்கங் கூறி
நன்னுத னீறு சாத்த நயந்துளங் கனிந்து போற்றி
யன்னவ னிருக்கை நல்க வனைவரு மிருந்தா ருங்கள்
பன்னரு மொழுக்க மெல்லா மூறின்றிப் படர்வ தேயோ. (௯௰)

குறையிலை யாகி வாழ்தல் கூடுங்கொ லெனவி னாவ
விறைவநின் னாணை யாலெங் கெழினெவண் ஞாயி றென்ற
முறைமையி னிருந்தோம் வந்து முளைத்ததோ ரிடையூ றைய
வறையுமற் றதுவி னாவி னதிசயம் விளைக்கு மென்றார். (௯௧)

அன்னதென் னெனவி னாவி னான்மநா யகர நாதி
முன்னவர் பணிசெய் பாக்குன் முன்னவ ரெமக்கு விட்ட
நன்னில மனைத்து நின்னை நட்டலுண் டாக்கன் கொண்டா
னின்னதே யிடையூ றுன்பா விசைத்திட வந்தோ மென்றார். (௯௨)

இவர்மறை யனைத்தும் வல்லா ரிவருப நிடதம் வல்லா
ரிவர்நலா கமங்கள் வல்லா ரிவர்புரா ணங்கள் வல்லா
ரிவர்வியா கரணம் வல்லா ரிவர்தருக் கத்தின் வல்லா
ரிவரிதி காசம் வல்லா ரென்றுமீ ளவுமு ரைத்தார். (௯௩)

எல்லாம்வல் லவரென் றாலு மெடுத்தவிவ் வழக்கிற் கென்னாம்
பொல்லானெங் நிலங்க வர்ந்தா னெனப்புகன் றுள்ளீ ருங்கள்
சொல்லார்நன் னிலமென் றற்கா வணந்தொட ராட்சி மற்று
நல்லார்தங் காட்சி மூன்று ளொன்றேனு நாட்டு மென்றான். (௯௪)

மூன்றனு ளொன்றை நாட்டு மென்றிறை மொழியக் கேட்டார்
தோன்றவொவ் வொன்றில் வல்லே மென்றமை துணியு மாறு
சான்றவவ் வரசன் முன்னா விளக்கிடச் சமைந்தார் கேட்ட
மீன்றவிர் கொடியா னென்னா மிவையென நகைத்து விண்டான். (௯௫)

ஆளுகை யவன தாயிற் றமைமுறி யையுங்க வர்ந்தா
னீளுறு மயலார் காட்சி யுண்டவர் நேரே சொல்லார்
கோளுறு குறும்பர் தோன்றல் கொல்லுவா னெனவுள் ளஞ்சி
வாளுயர் மன்ன ரேறே யென்செய வல்லோ மென்றார். (௯௬)

என்றலுங் குறும்பர் தோன்றா விம்மறை யவர்தம் பூமி
யொன்றநீ கவர்ந்த துண்டோ வில்லையோ வுரைத்தி யென்றான்
மன்றமற் றவன்கும் பிட்டு மன்னவா மறையோ ரென்பார்
முன்றம தென்பா ராயின் முயலுக்குங் கோடுண் டென்றான். (௯௭)

இந்தவா றிசைப்பா யாகி லெனதுபா ரென்ப தற்கு
முந்தவா தாரம் யாது மொழியெனத் தொன்று தொட்டு
நந்தவா ளுதலா தாரம் வேறிலை நவிறற் கென்றா
னந்தமா நிலத்திற் குள்ள வடையாள முரைத்தி யென்றான். (௯௮)

